# KEECHAKAN

BY

C. R. NAMASIVAYA MUDALIAR,

*Lecturer in Tamil, Presidency College, Madras; Member, Academic Council; Chairman, Board of Studies in Tamil; Chairman, Board of Examiners in Tamil, University of Madras.*

WITH AN INTRODUCTION

BY

RAO BAHADUR

A. C. PRANATARTIHARA AIYAR AVL., I. S. O.

MADRAS:

C. COOMARASAWMY NAIDU & SONS

1930

# கீசகன்

சென்னை இராஜதானி கலாசாலைத் தமிழாசிரியர்

கா. நமச்சிவாய முதலியார்

எழுதியது

ஸ்ரீமான் ராவ்பஹதூர்

அ. சி. பிரணதார்த்திஹர ஐயர் அவர்கள், I.S.O.

எழுதிய முகவுரை

சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1930

# INTRODUCTION

Pandit C. R. Namasivaya Mudaliar needs no introduction to the Tamil literary and educational public. His numerous contributions to Tamil literature are well known and few teachers of the young there are who are not familiar with his educational works. Among other directions in which his literary activities have been engaged are his occasional raids into our own classical literature and presentation, in a novel form, of interesting incidents contained in it.

*Keechakan*, in a dramatised form, is an instance of this kind. The scenes are well arranged, the situations grow, the one out of the other, the characters maintain each his or her own individuality. Keechakan is a villain, but the author has made him a villain of the type of Shakespeare's and Sir W. Scott's villains. He has his instincts of good nature and notions of rectitude of conduct, but is hurried to his ruin by his all-devouring passion. The story is told in the author's usual simple and clear style.

A. C. PRANATARTIHARA

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| தருமர் | — | பாண்டவரில் தலைவர், இவரே கங்கபட்டர் |
| பீமன் | — | தருமருக்கு இளையவன், இவனே பலாயனன் |
| அர்ஜுனன் | — | பீமனுக்கு இளையவன், இவனே பிருகந்நளை |
| நகுலன் | — | அர்ஜுனனுக்கு இளையவன் இவனே தாமக்கிரந்தி |
| சகாதேவன் | — | நகுலனுக்கு இளையவன், இவனே தந்திரபாலன் |
| திரௌபதி | — | பாண்டவர்க்குப் பத்தினி, இவளே விரதசாரணி |
| தௌமியர் | — | பாண்டவருடனிருந்த முனிவர் |
| விராடன் | — | விராட தேசத்து அரசன் |
| உத்தரன் | — | விராடராஜன் புத்திரன் |
| உத்தரை | — | விராடராஜன் புத்திரி |
| சுதேஷ்ணை | — | விராடராஜன் பட்டமகிஷி |
| கீசகன் | — | விராடராஜன் மைத்துனன் |
| பாங்கன் | — | கீசகனுக்கு நண்பன் |
| வாசவன் | — | ஒரு மல்லன் |
| கல்யாணி, இன்பவல்லி | — | பாங்கியர் |

## நாடகம் நிகழ்விடம்

பாண்டவர் வசித்த வனமும், விராட தேசமும்



விரதசாரணி பால் கொண்டுபோதல்

(பக்கம் 80)

# கீசகன்

**இடம் :** மச்ச நாட்டை யடுத்த ஒரு வனம்.
**காலம் :** நண்பகல்.
**பாத்திரங்கள் :** பாண்டவர், அசரீரி, தவுமியர், திரௌபதி.

[சகாதேவன் ஒரு குளக் கரையில் உணர்வற்று விழுந்து கிடக்கிருன்; அங்கு வந்த)

**நகுலன்** — இத்தகைய தடாகம் இவ்வளவு அருகில் இருக்க, சகாதேவன் எங்கே சென்றிருப்பான்! இருக்கட்டும், இத் தண்ணீரைக் கொண்டுபோய்த் தமையனுருக்குக் கொடுத்துவிட்டு, பிறகு தேடிப் பார்ப்போம். (தடாகத்தில் இறங்கித் தண்ணீர் அருந்துகிருன்) என்ன இது! தண்ணீர் முத்துப்போல் இருக்கிறது — சிறிது கசக்கிறதே. சருகுகள் விழுந்து அழுகியதா யிருக்குமோ — தலை சுற்றுகிறதே — மார்பில் அடைக்கிறதே — அண்ணு — தண்ணீர் — தண்ணீர் — தண்ணீர் (தரையில் சாய்கின்ருன்)

[பீமன் அங்கே வருகிருன்]

**பீமன்** — அவ் விருவரும் எங்கே போயிருப்பார்கள். அவர்கள் இந்த வழியே வாராமலே போயிருப்பார்களோ! (சுற்றிப் பார்க்கிறான்) இதோ இருக்கிறான் நகுலன்; களைப்புற்றுப் படுத்திருக்கிறான் — (பார்க்கிறான்) ஐயோ, உணர்ச்சி யற்றுக் கிடக்கிறானே, உயிர்ப்பும் இல்லையே! என்ன நேர்ந்திருக்கும்! (அருகில் சென்று தட்டிப் பார்த்து) அந்தோ சகாதேவா, சகாதேவா! — உனக்குமா இந்தக் கதி நேர்ந்தது! என்ன மாயம்! ஏதேனும் விஷம் தீண்டி யிருக்குமோ — (தண்ணீர் எடுத்து நகுலன் முகத்தில் தெளிக்கிறான்) ஆ, அண்ணாவுக்கு என்னென்று சொல்லுவது! எனக்கும் மயக்கம் உண்டாகிறதே! இது விஷ ஜலமோ — (மெல்ல நடந்து நீரைக் குடித்து ருசி பார்க்கிறான்) ஆம், ஆக்ஷேபமில்லை; இந்த ஜலமே இவர்கள் சாவுக்குக் காரணம். ஐயோ, என் கண்மணிகளே, இப்படியா முடிந்தது உங்கள் கதி! அண்ணா! அண்ணா! அண்ணா! (தரைமேல் சாய்கிறான்)

[அர்ஜுனன் வருகிறான்]

**அர்ஜுனன்** — திசைக்கு ஒருவராகச் சென்றார்களோ—இவ்வளவு புனிதமான பொய்கை இங்கே யிருக்க, அவர்கள் எப்படிப் போவார்கள் — (சுற்றிப் பார்க்கிறான்) அண்ணா, என்ன அயர்ந்து படுத்துவிட்டீர் — அயர்ச்சி யென்பது உமக்கும் உண்டோ! — (அருகில் போகிறான்) அண்ணா, அண்ணா, என்ன இது! பேச்சு மூச்சு ஒன்றுங் காணோமே!—காலடியின் ஈரமும் உலரவில்-

லேயே—சகாதேவனும் சாய்ந்து கிடக்கிறனே! நகுலா—அப்பா நகுலா—ஒன்றுங் காணேமே! உடல் அசையவும் இல்லேயே — இது மாயப் பொய்கையோ! ஐயோ அண்ணு! உம்முடைய சபதமெல்லாம் எங்கே—இந்த விபத்தை என்ன என்று அண்ணுவுக்குச் சொல்லுவது! இதை உணர்ந்தும் அவர் உயிரை வைத்திருப்பாரோ! தண்ணீர் கொண்டுபோக வந்து, சாவின் செய்தியா கொண்டுபோவது! தமையனுரைத்தான் தனியே விடுகிறேம்! நாமும் இவர்களோடு இறந்துபடு-வதே நலம். (தண்ணீர் அருந்துகிறன்) இது விஷ ஜலந்தான், சந்தேகமேயில்லே. மயக்கம் உண்டா-கிறதே! (மண்ணில் ஏதோ எழுதுகிறன்) அண்ணு, அண்ணு! அவலம்! அவலம்! (சாய்கிறன்)

[தருமர் வருகிறர்)

**தருமர்** — தண்ணீர் கொண்டுவரச் சென்ற தம்பியர் என்னுனர்கள்! இடையூறு நேர்ந்தால் ஒருவர் இருவருக்கு நேரும் — நால்வருக்குமா நேரி-டும் — என்ன வியப்பு! — இங்கு ஏதோ தடாகம் ஒன்று காண்கிறதே—(திடுக்கிட்டு) ஆ, அர்ஜுனு! என்ன இது! — மயக்கமோ! — ஐயோ, நால்-வரும் இங்கே விழுந்து கிடக்கின்றர்களே!

கொச்சகக் கலிப்பா

வீரமோ ருருக்கொண்ட வீமாவோ வீமாவோ
தீரமிகும் பரிவல்ல செல்வமே நகுலாவோ
சாருங் கலேயுணர்ந்த சகதேவா சகதேவா
ஆருந் தனுவல்ல அர்ஜுனவோ அர்ஜுனவோ.

நான்குவிர லோடு நடுவிரல்போல் நானின்றேன்
வான்குலவு நற்கீர்த்தி வாய்ந்தஎழிற் சோதரரே
கான்குலவ வந்திந்தக் கதியடைந்தீர் கண்மணிகாள்
நான்குலைய விட்டகன்றீர் நன்றேயோ நன்றேயோ.

ஆ, இங்கு ஏதோ எழுதியிருக்கிறது : 'அண்ணு, இது நச்சுப் பொய்கை; நால்வரும் இதன் நீரை அருந்தி மாய்ந்தோம் ; இதைத் தேவரீர் அருந்த வேண்டா.' — அருந்த வேண்டாவா! — நீங்கள் இறந்த பின்பும் நான் இந்த நிலத்தில் இருந்து உயிர் வாழ்வதா! — தருமம் தாங்குமா ! —என் தம்பியருக்கு வந்த கதியே எனக்கும் வரட்டும்.

[தடாகத்தில் இறங்குகிறார்]

**அசரீரி** — வேண்டா, வேண்டா ; தருமநந்தனு, இந்தத் தண்ணீரை நீ அருந்தவேண்டா. யாம் இப்போது கேட்கும் கேள்விகளுக்கு நீ விடை கூறு; பின்பு சொல்லுகிறோம்.

**தருமர்** — (சுற்றிப் பார்த்து) ஒருவருங் காணேமே — ஒருகால் அசரீரியாக இருக்கலாமோ — (உரத்து) தாங்கள் யாரோ தெரியவில்லை ; கேள்விகளை வெளியிட்டால், அடியேன் சிற்றறிவுக்கு எட்டியவரையில் யோசித்து விடை கூறுகிறேன்.

**அசரீரி** —

அகவல்

நலமியல வாய்ந்த நரபதித் தரும
இல்லறத் திற்காம் இயலது யாது,

**தருமர் —**

அருவுரு வான ஐயகேள் இந்த
இருநிலத் துயிரின் இயற்கையை உன்னில்
சேர்ந்து வாழும் செயலினை யுடையதாம்
தேர்ந்திடின் மானிடன் செய்கையும் அதுவே
ஆயினும் முன்னர் அவன்தன் நலத்தை
மாய்விலா தடைய மனங்கொண் டிடுவான்
அந்நலம் பின்னும் அவன்மனை மக்களில்
துன்னிய பின்புதன் சுற்றத் தவர்க்கும்
நண்பினர் தமக்கும் நாட்டவர் தமக்கும்
எண்ணுறு வகையில் இழிந்து குறைந்திடும்.
அவ்வா றின்றி அந்த நலத்தினை
ஒவ்விய வகையில் ஒருபடித் தாக்கி
எவ்வெவ ரிடத்தும் இன்புறப் பெருக்கல்
செவ்விய இல்லறச் சிறப்பென லாமே.

**அசரீரி —**

இல்லற முறையின் இயல்பினைக் கூறிய
செல்வநற் றரும தீரவே நினைந்து
செங்கோல் வகையால் செறிந்த ஆட்சியிற்
பொங்கிய நலத்தினைப் புகன்றிடு வாயே.

**தருமர் —**

ஆட்சி என்பது அவனியில் மாந்தரை
நாட்டுநற் றுறையில் நடத்துத லாகும்
அதனால்
வேந்த னுவான் வித்தையின் பயனுந்

## முதல் அங்கம்

தோன்றுநன் மைக்கெலாம் தோற்றுவா யாக
இருந்து மானிடர் யார்க்கும்ஓர் வகையால்
விருந்தென அவற்றை விழைவுடன் அளித்து
உலகின்மன் பதைக்கெலாம் ஓர்நிலை யாக
நிலவிய இன்பம் நேர்ந்திட முயற்சிப்
பெருக்கெனும் வழியில் பெட்புடன் நடத்தி
விருப்புடன் முன்புற விளங்குதல் அந்த
ஆட்சி யின்கண் அமைந்த நலமென
மாட்சிமை மிக்கோர் வகுத்திடு வாரே.

**அசரீரி —**

உத்தம மார்க்கம் உணர்ந்தநற் றரும
இத்தரை யின்கண் இயைந்திடு மாந்தர்
சுகமுறும் வாழ்வைத் துய்த்திட மேலாம்
வகைபெறும் நெறியை வழுத்திடல் வேண்டும்

**தருமர் —**

தருமமோர் உருவாத் தங்கி யீங்கே
அருள்புரிந் திடுநல் லண்ணலே என்றும்
இன்பதுன் பங்களுக் கிதயமே மூலம்
இன்பம் நேரின் இறுமாந் திடலும்
துன்பம் நேரின் சோர்ந்துவீழ்ந் திடலும்
மன்னிய கயவர் வழக்க மாகும்
எதுவந் தாலும் இயல்பென் றுன்னித்
தீதெனக் கொண்ட செய்கையின் நீங்கி
வேண்டு மவற்றினும் மிகுபற் றுறுமல்
நீண்ட வினையினல் நிழலெனத் தொடர்ந்து
அதுஅது நேரும் அவ்வவ் விடத்தே

அதுஅது வாக அனுபவித் தொழித்து
வாழ்க்கைக் கிறைவன் வழங்கிய பொருளைத்
தாழ்விலா வகையில் சார்வுடன் நுகர்ந்தே
ஆழ்ந்த கருத்துடன் அமைந்தவாழ்க் கையராய்ச்
சூழ்ந்து விளங்கலே சுகநிலை யாகும்.

**அசரீரி —**

அருங்குணத் திறற்கோர் ஆகர மாகும்
தருமகேள் இந்தத் தாரணி யதனில்
எண்ணுறு மானிடம் எடுத்தோர் தமக்குப்
பண்புறு வாழ்க்கைப் பயனெது பகராய்.

**தருமர் —**

இல்லற வழியில் எல்லோர் தமக்கும்
நல்லியல் வாய்ப்ப நடந்திவ் வுலகில்
மன்னவன் காட்டும் வழியினில் ஒழுகி
மன்னிய நிறைமன வாழ்க்கையைப் பெற்று
ஆணும் பெண்ணும் அல்லதை யுணர்ந்து
காணும் பொருட்கெலாம் காரண னாகும்
அவனடி வணங்கி அவனடி யவரைத்
தவமுறு வழியிற் சார்பெனக் கொண்டு
பகலிர வற்றுப் பண்பின் எப்பொழுதும்
துகளற நெஞ்சந் தூய்மை யடைந்து
ஆழ்த்தும் பிறவி யல்ல லறுத்தலே
வாழ்க்கைப் பயனென வழுத்துவர் மேலோர்.

**அசரீரி —** தருமநந்தனு, நீ கூறிய விடையால் யாம் உள்ளம் மகிழ்ந்தோம். உன் மனத்துக்கு உவந்த

சகோதரன் ஒருவன் பெயரைச் சொல், அவன் உயிர்பெற்று எழும்படி செய்கிறோம்.

**தருமர்** — அருவுருவான அண்ணலே, அப்படியாயின் நகுலன் உயிர்த்தெழுமாறு அருள்புரியவேண்டும்.

**அசரீரி** — தரும, மற்றவர்களை விட்டு, நகுலன் உயிர்த்தெழுமாறு நீ வேண்டியதற்கு நியாயம் யாதோ?

**தருமர்** — என் தாய்க்கு யான் ஒரு புதல்வன் இருக்கிறேன்; என் மாற்றாந்தாய்க்கும் ஒரு மைந்தன் உயிர் பெற்று உலகில் வாழ்தல் தகுதியன்றோ? ஆதலால், அவ்வாறு வேண்டினேன்.

**அசரீரி** — தருமநந்தனா, உன்னுடைய நடுநிலைமையைக் கண்டு பெரிதும் உவப்படைந்தோம். யாம் தருமதேவதை; உனது குணத்தைச் சோதிக்கவும், உங்களுக்குற்ற துயரை நீக்கவும் கருதி இங்கு வந்தோம். துரியோதனன் காளமா முனிவரைக்கொண்டு ஒரு யாகம் செய்வித்து, அதில் ஒரு பூதனை உண்டாக்கி, உங்களைக் கொல்லுமாறு அவனை அனுப்பினன். அவன் வந்து உங்களைக் கொல்லுமுன், யாம் இங்கு ஒரு நச்சுப் பொய்கை உண்டாக்கி, உனது சகோதரர் அதன் நீரை யுண்டு இறந்துபட்டவர்போலக் கிடக்கச் செய்தோம். பிறகு அப்பூதன் வந்து இவர்களைப் பிணமென்று நினைத்து வெறுத்துப் போய்விட்டான். இனி, இந் நால்வரும் உயிர் பெற்று எழுவர். எல்லோரும் சென்று சேர்ந்து, இன்பமடைந்து வாழ்ந்திருங்கள். யாம் போய்வருகின்றோம்.

**தருமர்** — அகவல்

அருவுரு வான அருளே போற்றி
தெருளிலா எம்மைத் தேற்றி யிந்நாளில்
ஆருயிர் தந்த ஐயனே போற்றி
சேருந் துன்பெலாந் தீர்த்தாய் போற்றி.

[தம்பியர் நால்வரும் எழுகின்றனர்]

**நகுலன்** — அண்ணா, தண்ணீர் கொண்டுவருவதற்குள் தாங்கள் ஏன் இங்கே வந்தீர்கள் ?

**சகாதேவன்** — அண்ணா, இந்தத் தண்ணீரை அருந்திவிட்டீர்களோ !

**தருமர்** — என் கண்மணிகாள், எனக்கு ஒன்றுமில்லை, அஞ்சவேண்டா ; உட்காருங்கள், எல்லாம் இறைவனருளால் இன்பமாகவே முடிந்தது.

[தவுமிய முனிவர் திரௌபதியை அழைத்துக்கொண்டு அங்கு வருகின்றார்]

**தவுமியர்** — என்ன இது ! ஏககாலத்தில் ஐந்து பேரும் இப்படி வந்துவிட்டீர்களே ! எவ்வளவு காலமாயிற்று ! திரௌபதி தனியே இருந்து தளர்கின்றாளே ; தடாகத்தைக் கண்டதும் சந்தோஷமாகத் தங்கிவிட்டீர்களோ ?

**தருமர்** — முனிவர் பெரும, இன்று எங்களுக்கு ஓர் இடையூறு நேர்ந்துவிட்டது. ஆயினும், தங்கள் அருளால் அது ஒருவாறு நீங்கிற்று.

**தவுமியர்** — இடையூறா ! என்ன அது ?

**தருமர்—**

விருத்தம்

கவுரவர் எம்மைக் கொல்லக்
காளமா முனியைக் கொண்டோர்
அவமுறும் யாகம் செய்து
அனுப்பினர் பூதம் ஒன்றை
நவமுறும் இந்நீர் உண்டு
நால்வரும் உயிர்து றந்து
சவமுறக் கிடத்தல் கண்டு
தானவன் போயி னனும்.

**தவுமியர்** — என்ன கொடுமை! எவ்வளவு வஞ்சகம்! பின்பு இவர்கள் எவ்வாறு உயிர்பெற்றனர்கள்?

**தருமர்**—அடியேன் இவர்களைத் தேடிக்கொண்டு இங்கு வந்தேன். இவர்கள் இறந்துகிடப்பதைக் கண்டு வருந்தி நிற்கையில், தருமதேவதை அசரீரியாக வந்து என்னைச் சில கேள்விகள் கேட்டது. தங்கள் ஆசீர்வாதப் பயனால் தக்கவாறு விடை கூறினேன். அத்தருமதேவதை மனம் மகிழ்ந்து, இவர்கள் உயிர்த்தெழ அருள் செய்தது மன்றி, நடந்த செய்தியையும் உணர்த்திச் சென்றது.

**தவுமியர்** — சரி, எல்லாம் இனிது முடிந்துவிட்டது. நல்லோர்க்கு மலைபோல் வருந் துன்பங்களெல்லாம், பரிதிமுன் பனியேபோல் நீங்கிப்போகும். இருக்கட்டும், இன்னும் நீயேன் வாட்டமுற்று இருக்கிறாய்? வனவாசமும் இன்றோடு ஒழிந்ததே.

**தருமர்** — முனிவர் பெரும, எண்ணிச் செய்க கருமம் என்பர் பெரியோர். அடியேன் எண்ணுமல் இயற்றிய கருமத்தால் இவ்வளவு துன்பத்திற்கும் இடம் உண்டாயிற்று.

**தவுமியர்** — தருமபுத்திர, நீயா இதற்கு வருந்துவது! மெய்த்திரு வந்துற்றாலும், வெந்துயர் வந்துற்று-லும் ஒத்திருக்கும் உள்ளத்தாரவோ யிற்றே நீ; நீயே உண்மை யுணராதவரைப்போல் உள்ளம் உடைந்தால், உன்னை ஆற்றித் தேற்றுவார் எவர்; கடல்நீர் முற்றும் வெந்நீரானல், அதனை மற்று எந்நீர் கொண்டு ஆற்றுவது!

**தருமர்** — சுவாமீ, இன்பமோ துன்பமோ அடியே-னுக்குமட்டும் நேரிடுவதானல் சிறிதும் கவற்சி யில்லை. நிரபராதிகளான என் சகோதரர்க்கும் இந்தத் தையலுக்கும் என்ருல் இன்னலெல்லாம் நேர்ந்தது. அதுதான் என்மனத்தைப் பெரிதும் வருத்துகின்றது.

**அர்ஜுனன்** — அண்ணு, தாங்கள் ஏன் இவ்வாறு எண்ணி வருந்தவேண்டும். தாங்கள் வேறு, யாங்கள் வேறு! இதற்கேன் சிந்தனை?

**தவுமியர்** — அது கிடக்கட்டும், தருமபுத்திர, ஏன் அந்த விஷயத்தை இப்போது நினைத்துக்கொண்-டாய்? கடலைக் கடக்கும்போது இல்லாத கவலை கால்வாயைக் கடக்கும்போது உண்டாவதேன்?

**தருமர்** — சுவாமீ, பன்னிரண்டு வருஷங்கள் காட்டில் வசித்தது சிறிதும் கவற்சியை உண்டாக்கவில்லை;

இனி, இப்பன்னிரண்டு மாதங்களைக் கழிப்பதே பெருங் கவலையை உண்டாக்குகிறது.

**தவுமியர்** — பன்னிரண்டு மாதங்களைப் பன்னிரண்டு நாழிகைகளாகக் கழித்துவிடலாம். தருமபுத்திர, இதற்காக நீ சிறிதும் சிந்திக்கவேண்டா.

**தருமர்** — சிந்தனை ஒன்றுமில்லை. அஞ்ஞாத வாசம் என்றால் சாமானியமா! வேற்றுருவங் கொண்டு, வேறொருவருங் காணாதபடி மறைந்து வாழ்தல் வேண்டுமே! அடியேனுக்கு ஒன்றும் அல்லல் இல்லை. மலையே எதிர்ந்து வரினும் மனங் கலங்குதலில்லாத என் தம்பியர் எவ்வாறு ஒருவர்க்கு அடங்கி நடப்பர்!

**தவுமியர்** — அதற்கு என்ன செய்யலாம், எந்தெந்தக் காலத்தில் எதெது வருமோ அந்தந்தக் காலத்தில் அதது வந்தே தீரும். நன்மை வந்தால் நயப்பதும், தீமை வந்தால் துக்கிப்பதும் அறிவுடையோர் செய்கை யல்லவே.

**விருத்தம்**

சென்றது வருவ தில்லை
தீரவே வருந்தி னாலும்
நன்றது வருமென் றெண்ணி
நயப்பதும் மடமை யாம்முன்
நின்றது கருமமென்றே
நேர்படக் கோடல் நன்றாம்
என்றிவண் அறிவின் மிக்கோர்
இயம்புதல் உண்மை யாமே.

தருமபுத்திர, நீ இதை யெல்லாம் எண்ணி வருந்தாதே; இனி நடக்க வேண்டிய காரியங்களைக் கவனிப்போம்.

**தருமர்** — முனிவர் பெரும, அவ்வாறே செய்வோம். நாங்கள் இனி என்ன செய்ய வேண்டும், எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை அன்புகூர்ந்து அருளிச் செய்யவேண்டும்.

**தவுமியர்**—தருமபுத்திர, நீ வருந்தும்போது மறுத்துத் தைரியங் கூறினேன். இப்போது நீ கேட்கவும் விடைகூற என் மனம் எழவில்லை. இருக்கட்டும், என்ன செய்யலாம். (சுற்று முற்றும் பார்த்து இரகசியமாக) நாட்டுக் காவலர்களாகிய நீங்கள் இனி வீட்டுக் காவலர்களாக மாற வேண்டியிருக்கிறது. எங்கேயாயினும் தொழிலில் அமர்ந்து, ஒருவரும் அறியாவண்ணம் ஓர் ஆண்டு காலம் கழித்தல் வேண்டும். அதற்கு விராடபுரமே தக்கது.

**அர்ஜுனன்** — ஆமாம், அதற் கென்ன தடை, அந்த நாட்டின் மன்னன் செங்கோலரசன், நடுவுநிலைமை தவறாதவன்; தன் குடிகளுக்குற்ற நன்மை தீமைகளைத் தனக்கே உற்றனவாகக் கொள்ளும் உத்தமன், ஏற்றோர்க்கு இல்லை என்னாதவன், கற்றோரைத் தன் கண்ணாகக் கருதும் கருத்துடையவன்; ஆதலின் அவனை அடைதலே தக்கதாகும்.

**தருமர்** — அப்படியே செய்யலாம். முனிவர, யாங்கள் அங்கே நடந்துகொள்ள வேண்டிய விஷயங்களை அருள்புரியவேண்டும்.

## முதல் அங்கம்

**தவுமியர்** — என் கண்மணிகாள்,

அசாவேரி] **பல்லவி** [ஆதிதாளம்

அடங்கி ஒரு வருஷ மாத்ரம் இருக்கவேணும்
அப்பால் சொல்லுவோங் காணும் (அடங்கி)

**அநுபல்லவி**

தொடங்கும் பகைவர் வந்துங்
களைக் காணத் தலைமேலே
சொட்டுப் போட்டாலும் நீங்கள்
பெட்டிப் பாம்புகள் போலே (அடங்கி)

**சரணம் — 1**

கஷ்டதசையால் பன்னிரண்டு வருஷம் நீங்கள்
காட்டில் திரிந்தீரே அதனாலே — ஒரு
காசுக்கும் பலனில்லை இந்தநாளை மாத்ரம்
கழித்தால் பெறுவீர் செல்வம் ஒருகாலே
துஷ்டப்புலியும் கார்யத்தாலொடுங்கிப் பசுவின்
தோலைப் போர்த்துக்கொண்டு புவிமேலே — பரி
சுத்தமாகவே தன் செயலைமறந்து வெல்லும்
சூக்ஷ்மமென்ன ருத்திராக்ஷப் பூனையைப்போலே
(அடங்கி)

**தருமர்** — ஐயோ, இவ்வளவு வஞ்சகமாக மறைந்திருக்க வேண்டுமா! இதனினும் சிறை யிருப்பதே சிறப்புடையது என்னலாமே!

**தவுமியர்** — ஆம், தருமநந்தன, என்ன செய்யலாம். காலத்திற்கேற்ற கோலத்தை யடைய வேண்டும். நீங்கள் அவ்விடத்தில் இருக்கும்போது,

**சரணம் — 2**

பட்டுக் கத்தரித்தாற்போல் வேலை செய்தாலும் அன்
 படைப்போர் ஒருவேளை சுடாமல் — சுடும் [னம்
படிக்கொன்று சொல்லுவார் அதற்கா நீங்கள்வீணாப்
 பாடுஞ் செய்யவா வெடாமல்
தட்டுந் திருடனைத்தேள் கொட்டிடில் என்னசெய்வார்
 தண்மை பூண்டு கைவிடாமல் — என்றும்
தலையால் உங்கள் குடியைத் தாங்கப்பிறந்தமா [மல்
 தவன்தேடி வந்தாலும் அவன்கண்ணி லும்படா

(அடங்கி)

**தருமர்** — மறைந்திருப்பதோடு இவ்வளவு கஷ்டமும் அனுபவிக்க வேண்டுமா!

**தவுமியர்** — ஆமாம், என்ன செய்யலாம்!

**சரணம் — 3**

பார்முழுமையும் கொள்ளத் தரியன் செய்ததை யெண்
 பார்க்கில் ஐயையோ என்கும்பி — மிகப் [ணிப்
பற்றியெரியுதென்ன செய்குவேன் ஆனாலும்
 பதறவேண்டாம் இந்தத் தம்பி
மார்களுக்கும் திரௌபதிக்கும் உறுதிசொல்லி
 வரவேண்டும் நீதானே வெம்பி — மனம்
வாடுவ தழகல்ல கூடிவருங் காலம்
 வந்துவிட்ட திப்போது என்றன் சொல்லைநம்பி

(அடங்கி)

**பீமன்** — முனிவர் பெரும, என்ன இது, புலி பசித்தாலும் புல்லைத் தின்ப துண்டோ? கடுகு சிறுத்தாலும் காரம் போய்விடுமோ?

## முதல் அங்கம்

**விருத்தம்**

மன்னவ ரெல்லாம் வந்து
மணிமுடி படவ ணங்கி
மன்னிய திறைக ளீய
மகிழ்வுடன் ஏற்றுச் செங்கோல்
துன்னிட இருந்த என்முற்
றோன்றலாம் தருமர் இன்று
பின்னிட ஒருவர் பாற்போய்ப்
பிழைப்பதும் ஏற்ற தாமோ

ஆகா, என்ன காலம் இது!

**தவுமியர்** — அப்பா பீமசேனு, வருந்தாதே; எவரும் சத்தியத்திற்குக் கட்டுப்படவேண்டும்; பொறுத்தவர் நாடாள்வர், பொங்கினவர் காடாள்வர்; இன்னும் கொஞ்சகாலம் பொறுப்போம்.

**பீமன்** — சுவாமீ, பொறுத்தவர்தாம் காட்டை யாள்கின்றோம், பொங்கினவர்தாம் நாட்டை யாள்கின்றார்; இதைவிடப் பிரத்தியக்ஷ பிரமாணமும் வேண்டுமா?

**தவுமியர்** — பீமசேனு, 'அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்' என்பதை அறியாயா?

**பீமன்** — நமது கையில் எதும்பில்லாவிட்டால் தெய்வந்தான் அவர்களைக் கொல்லவேண்டும்.

**தருமர்** — தம்பி பீமசேனு, வருந்தாதே; எனக்கு ஏதும் குறைவு வாராது. காலகதிகளெல்லாம் மாறிவந்தாலும் என் மனநிலை மாறுபடாது.

சௌராஷ்டிரம்] (பாட்டு - கண்ணிகள்) [ஆதிதாளம்

தருமதேவதை தந்த வரத்திஞல் பிராம்மண
சந்நியாசி திருக்கோலம் — கொண்டுலகில்
நிருபரும் எனைத்தொழ ஆசிகூறி நல்ல
நெறியிற் கழிப்பேன் காலம்.

ஆதலால் என்பொருட்டு நீங்கள் கலங்கவேண்டா ; உங்கள்பொருட்டே நான் பெரிதும் வருந்துகிறேன். பீமசேஞ, நாங்கள் அனைவரும்,

(பாட்டு)

அன்றரக்கு மாளிகையில் எரிந்திடாமல
ஆவியிடரைத் தீர்த்தாய் - மதத்தால் நமமைக
கொன்று தின்னவந்த இடும்பஞவியைத்தென்
கூற்றனுலகில் சேர்த்தாய்.

தனம்போய் பாண்டவரெனும் கனம்போய் நாடுநகரம்
சகலமும் போய்கும்பிக் — கொவ்வொருவேளை
அனமும் கிடைத்திடாமல் வனமும் மலையுஞ்சுற்றி
அலையும்போது தம்பி.

ஏகசக்ரபுரத்தில் அந்தணர் குடிகளீ
டேறப் பகனைக்கொன்ருய் — திரௌபதியை
வேகமாக எடுத்துப்போன கிம்மீரனை
விண்பாய்ந்தடித்து வென்ருய்.

இன்னும் அநேகவித நன்மைகளைப் புரிந்தாய்
இன்னன்பு பிரியாதே — மெய்தானெல்லாம்
மன்னவர்க்கிதஞ் சொல்லிப் பிழைத்திட உனக்கொரு
மார்க்கமும் தெரியாதே.

இப்படிப்பட்ட நீ, ஐயோ, எவ்வாறு ஒருவர்க்கு அடங்கி ஊழியஞ் செய்யப்போகிறாய்!

**பீமன்** — அண்ணா, தாங்கள் எனக்காக இவ்வளவுஞ் சிந்திக்க வேண்டா; என்ன செய்யலாம், நம்முடைய காலம் — நான்,

(பாட்டு)

ஏன்காலங் கழிந்திடச் சமையல்செய் திவ்வேந்துக்
கிட்டிந்தப் பாழ்நாளை — இடரில்லாமல்
தென்பாய்க் கழித்திடுவேன் அண்ணா வருந்தவேண்டா
தேர்ந்திட்டேன் இவ்வேளை.

**தருமர்** — அவ்வாறே செய். (அர்ஜுனனைப் பார்த்து) தம்பி அர்ஜுனா, நீ காலத்துக் கேற்ற கருத்தை அறிவை; உனக்கு யான் என்ன சொல்வது!

(பாட்டு)

உத்தரகுலமக மேருவுக் கப்பாலும்
உனது வெற்றிக்கொடியை — நாட்டிமன்னர்
வைத்த திறைகொணர்ந்து வைத்தெனக்குச்சூட்டி
வைத்தாய் செம்பொன் முடியை.

காலகேய நிவாத கவசர்கள் பூண்டறக்
கருவறுத் திந்திராணி — அமுதமூட்ட
வாலசூரியன்போல் சிங்காதனத்திருந்தாய்
மகிழ வச்சிரபாணி.

அப்பா நீ என்ன செய்யப்போகிறாய்?

**அர்ஜுனன்** — அண்ணா, எனக்கு,

(பாட்டு)

உருப்பசி சாபமொன் றுண்டதனால் பேடி
உருக்கொண் டிசைகளாலே—வேந்தனுளம்
விருப்பங் கொளச்செய்தவன் அரங்கிலிருந்திந்நாளை
விலக்குவேன் புலிபோலே.

**தருமர்**—ஐயோ, போர்க்களத்தில் எதிர்த்தோரையெல்லாம் பேடிகளாகக் காணும் நீயா அவ்வுருவங் கொள்ளுவது! என்ன காலம்! **(நகுலனைப் பார்த்து)** என் கண்மணீ, நகுல, இந்தக் கடுங் காலத்தைக் கழிக்க நீ என்ன செய்யப்போகிறாய்?

**நகுலன்** — அண்ணா, தங்கள் சகோதரனாகித் தங்கள் ஆசீர்வாதத்தைப் பூர்ணமாகப் பெற்ற எனக்குக் குறையேது?

(பாட்டு)

அப்பார்த்தி பண்மகிழ வந்தங்கு நானொரு
அசுவலக்ஷணனாக — வேஷங்கொண்டு
இப்பார் புகழப்பரிக் குலங்களுக் கிறைவனாய்
இருப்பேன்இந் நாள்போக.

**தருமர்**—ஐயோ, குதிரைப்பாகனாகவா இருக்கப்போகிறாய்! என்ன செய்வது! எல்லாம் இறைவன் செயல். **(சகாதேவனை நோக்கி)** கண்மணீ, நீயோ மூன்று காலமும் நன்கு அறிவாய்; இதுவரையில் உடல் வருந்தி ஒன்றும் செய்தவனல்லவே, நீ என்ன செய்யப்போகிறாய்?

**சகாதேவன்** — அண்ணா, நானும் ஏதாவது ஒரு வேலை பார்க்கிறேன்.

முதல் அங்கம்

(பாட்டு)

பகரும நானும்நல்ல கோபால னுகியங்கே
பசுக்கள் மேய்ப்பவர்க் கிறையாய் — மச்ச
மகாராஜன் மகிழ்ந்திடக் கழிப்பேன் இந்தநாளை
வஞ்சகர்க் கெதிர்முறையாய்

என்பொருட்டு வருந்த வேண்டா. நாம் எப்படி யிருந்தால் என்ன; அடிமைகள் ஆனுலும் அனை வரும ஓரிடத்திலிருக்கும்படி அமைவது பெரும் பேறன்ருே; நாம் ஏன் வருந்தவேண்டும்.

**தருமர்** — ஐயோ, உனக்கு என்ன விதி! (திரௌபதியை நோக்கி) எல்லாம் நன்கு முடிந்தது; பெண்மணீ, உனக்கு என்ன உபாயம் தேடுவது?

**திரௌபதி** — பிராணநாதா, என்பொருட்டுச் சிறிதுங் கவலை வேண்டா,

விருத்தம்

பெண்ணெனக் கண்ட போதே
பேயும்நெஞ் சிரங்கு மென்பார்
பெண்ணெனக் கண்டால் பெண்டிர்
பெரிதும்நெஞ் சிரங்கி டாரோ
எண்ணிய விராடன் தேவிக்
கெழிலலங் காரஞ் செய்யும்
வண்ணநன் மகளாய்ச் சென்றென்
வாழ்க்கையைக் கழிப்பே னன்றே.

**தருமர்** — முனிவர் நாயக, தங்கள் ஆசீர்வாதப் பயனுல் எல்லாம் இனிது முடிந்தது. நாங்கள் விராட

ராஜன் அரண்மனையை யடைந்து, தொழிலில் அமர்ந்து, அஞ்ஞாதவாசஞ் செய்கிறோம். ஆசீர்-வதித்தருள வேண்டும்.

**தவுமியர்** — நல்லோர்க்கு யாவும் நன்றாக முடியும்; குறையொன்றும் நேராது. ஆசீர்வாதம், போய் வாருங்கள். இறைவன் இன்னருள் பாலிப்பானாக.

[ஒவ்வொருவரும் தவுமியரிடம் தனித்தனி விடை பெற்றுச் செல்கின்றனர்.]

**தருமர்** — தம்பி அர்ஜுனா, இனி, நமது ஆயுதங்களை யெல்லாம் இதோ காணும் வன்னி மரத்தின்மேல் வைத்துவிட்டு, வேற்றுருக்கொண்டு செல்லு-வோம்.

**அர்ஜுனன்**—ஆம், அப்படியே செய்வோம், அண்ணா.

[எல்லோரும் போகின்றனர்.]

# முதற் களம்

**இடம் :** விராடன் அரண்மனை.
**காலம் :** பிற்பகல்.
**பாத்திரங்கள் :** தருமர், விராடன், பீமன்.

**காவலன்** — ஆண்டவரே, யாரோ ஒருவர் சமூகத்தை நாடி வந்திருக்கிறார்.

**விராடன்** — உள்ளே வரட்டும்.

[பீமன் பலாயனன் என்னும்
ன்.]

**பலாயனன்** — (வணங்கி) ஆண்டவரே, வந்தனம்.

**விராடன்** — நல்லது, நீ யார்? என்ன விஷயம்?

**பலாயனன்** — பெருமானே, என் பேர் பலாயனன்: சமையல் செய்ய நன்கு அறிவேன்; பதார்த்தங்களின் குறைகுணங்களும் தெரிவேன். மல்யுத்தம் செய்யும் வல்லமையும் உண்டு. உத்தரவானால் அரண்மனையில் அமர்ந்து தொழில் செய்துவருகிறேன், அரசே.

**விராடன்** — பதார்த்தங்களின் குணங்களை நன்கு அறிவையா — நல்லது, கிழங்குகளில் சிறந்தது எது?

**பலாயனன்** — அரசே, கிழங்குகளில் சிறந்தது கருணைக்கிழங்கு. 'மண்பரவு கிழங்குகளில் கருணையன்றிப் புசியோம்' என்று வாகடம் கூறுகிறது.

**விராடன்** — சரி, விளாம்பழத்தின் விசேஷம் என்ன?

**பலாயனன்** — வெண்பா

எப்போதும் மெய்க்கிதமாம் ஈளையிரு மல்கபமும்
வெப்பாகும் தாகமும்போம் மெய்ப்பசியாம்—இப்புவியில்
என்றாகி லும்கனிமேல் இச்சைவைத்துத் தின்னவெண்ணித்
தின்றால் விளாங்கனியைத் தின்.

**விராடன்** — அப்படியா, நல்லது, நெய் கலந்த சாதத்தின் குணமென்ன?

**பலாயனன்** — வெண்பா

வெறுநெய்யுஞ் சோறுமுண்ணில் வீறுபலம் நண்ணும்
கிறுகிறுத்த பித்தநோய் கிட்டா — தறுவிக்கும்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காட்டுமிக ஜீரணமாம்
உண்ணற்குப் பத்தியமுண் டோ.

[தருமர் கங்கபட்டராகக் கையில் ஜபமாலை உருட்டிக்கொண்டு வருகின்றனர்; அப்பெரியார் வரவுகண்டு எழுந்து]

**விராடன்** — சுவாமி, எழுந்தருள வேண்டும். (வணங்குகின்றான், பலாயனனைப் பார்த்து) நல்லது, பலாயனா, நீ மடைப்பள்ளிக்குப் போகலாம்.

**கங்கபட்டர்** — மன்னர் மன்னா, நீயும், நினது நாடும் நீடு வாழ்க.

MADRAS-4

## இரண்டாம் அங்கம் - முதற்களம்

**விராடன்** — விருத்தம்

மாதவ முனிவ ரேறே
மனத்தினி லடிய னேனைக்
காதலித் தருள முன்னாள்
கடையனேன் புரிந்து வைத்த
ஓதருந் தவமோ இந்த
ஊர்புரி தவமோ அன்றி
ஏதமில் எந்தை முன்னோர்
இயற்றிய தவமோ யாதோ.

முனிவர் நாயக, இன்றே என் இல்லம் தூய்மையடைந்தது. அடியேன் இயற்றிய தவமே தவம். சுவாமீ, அடியேன் செய்யவேண்டிய குற்றேவல் ஏதேனும் உண்டாயின் உரைத்தருள வேண்டும்.

**கங்கபட்டர்** — மன்னர் மன்ன, யாம் சிறிது காலம் நின் சமுகத்திலிருக்க நாடி வந்தோம்.

**விராடன்** — முனிவர் பெரும, இதனினும் அடியேன் பெறத்தக்க பேறு வேறு யாது!

விருத்தம்

பொனுள்ளான் பூமியுள்ளான்
புந்தியுள்ளா னாயிடினும்
என்னுள்ளா னவனவன்
இருந்தவத்தோர் நட்பிலனேல்
பொன்னில்லான் பூமியில்லான்
புந்தியில்லா னாயிடினும்
என்னில்லா னவனவன்
இருந்தவத்தோர் நட்புளனேல்.

என்று கூறுவர் நம்மை யொத்த பெரியோர்.
ஆதலால், இனி இது,

(பாட்டு)

உங்களவ யங்களவாசல் உங்கள்நா டடியேனும்
ஊழியஞ் செய்வேனே — ஒரு
சங்கையில் லாமலே தங்கியிருக்கலாம்
சந்தோஷ மாகத்தானே.

**கங்கபட்டர்** —

அகவல்

மன்ன வாழி வள்ளால் வாழி
இறைவ வாழி ஏந்தால் வாழி
வாழி வாழி வாழிநின் வளம்பதி
வாழி மக்களும் வாழிவா ழியவே.

மன்னர் மன்ன, யாம் உன் மனநலத்தை எண்ணி இங்கே வந்ததல்லது வேறன்று.

**விராடன்** — முனிவர் நாயக, தேவரீர் எப்போதும் அடியேன் அருகிலிருந்து நன்மதிகூறி ஆசீர்வதித்து ஆதரித்தருளல் வேண்டும்.

**கங்கபட்டர்** — அவ்வாறே யாகுக.

**விராடன்** — பட்டர்பெரும, வெளியே சற்று உலாவப் போகலாமே.

**கங்கபட்டர்** — ஆகா, போகலாம்.

[போகின்றனர்]

## இரண்டாங் களம்

**இடம் :** விராடபுரத்தின் ராஜவீதி.

**காலம் :** மாலை.

**பாத்திரங்கள் :** உத்தரன், நகுலன், சகாதேவன்.

[உத்தரன் தேரேறி வரும் வழியில் குதிரை வெருண்டு ஓட, நகுலன் தந்திரபாலனாக வந்து அக் குதிரையைப் பிடித்து நிறுத்தி.]

**தந்திரபாலன்** — முகத்தைப் பார்த்ததே இது முரட்டுக் குதிரையென்று தெரிந்தது.

**உத்தரன்** — அப்படியா, எப்படித் தெரியும் உனக்கு ?

**தந்திரபாலன்** — அரசே, அடியேன் அசுவ லக்ஷணங்களிற் சிறிது அறிவேன், அவற்றிற்கு உண்டாகும் நோய்களையும் உணர்ந்து நுட்பமாகச் சிகிச்சை புரிவேன். அடியேன் அரசர்களிடம் சென்று, குதிரைகளுக்குச் சிகிச்சை செய்வது வழக்கம்.

**உத்தரன்** — சரிதான், குதிரைச் சுழிகளின் குணா-குணங்கள் உனக்குத் தெரியுமோ ? குதிரையின்

வர்ண பேதங்கள் எவை? அவற்றின் குணங்கள் என்ன? சொல் பார்ப்போம்.

**தந்திரபாலன்** — அரசே, அசுவசாஸ்திரமோ அகன்ற சாஸ்திரம். அதில் அடியேன் சிற்றறிவிற்கு எட்டியமட்டும் கூறுகிறேன்: வெள்ளி, முத்து, பால், சங்கு, பனி ஆகிய இவற்றின் நிறம்போல் இருப்பன வெண்மைக் குதிரைகள். மாதுளம்பூ, செம்பஞ்சுக்குழம்பு ஆகிய இவற்றின் நிறம்போ-லிருப்பன சிவப்புக் குதிரைகள். மை, வண்டு, குயில், மேகம் ஆகிய இவற்றைப்போல் இருப்-பன கருங் குதிரைகள். நெருப்பு, கோரோசனை ஆகிய இவற்றைப்போல் இருப்பன பொன்னிறக் குதிரைகள் ஆகும்.

**உத்தரன்** — இந்த நான்குதானே? இன்னும் ஏதே-னும் உண்டோ?

**தந்திரபாலன்** — இன்னும் பல உண்டு. வெண்மை, செம்மை, கருமை, பொன்மை ஆகிய நான்கு நிறமும் கலந்தது மிசிரமம். முகம், மார்பு, உச்சி, வால், கால் ஆகிய எட்டு உறுப்பிலும் வெண்மையுடையது அஷ்டமங்கலம். உச்சி, கால்கள் ஆகிய ஐந்து இடங்களில் வெண்மை நிறமுள்ளது பஞ்சகல்யாணி. இவை போன்-றவை இன்னும் பல உண்டு, அரசே.

**உத்தரன்** — நிறங்கள் சரிதான், அவற்றில் இன்ன நிறம் நல்லது என்பதில்லையோ?

**தந்திரபாலன்** — இருக்கிறது, அதையும் கூறுகின்-றேன், அரசே

## இரண்டாம் அங்கம் இரண்டாங் களம்

### விருத்தம்

எவ்வண்ணப் பேதமிருந் திருந்தாலும்
வெள்ளைகலந் திருந்த தானால்
அவ்வண்ணப் பரிநன்று கரும்புரவிக்
ககடேனும் அதன்மார் பேனும்
செவ்வண்ண மிருக்கின்அது ஜயமுளதப்
படிவெண்மை சேர்ந்தா லந்த
மைவண்ணப் பரியின்பேர் வாருணமாம்
ஜயங்கொடுக்கும் மாற்றார் போரில்.

மகவளிக்கும் பிடர்வெளுப்பு மகிழ்வளிக்கும்
உரவெளுப்பு மணித்தார் கண்டத்து
அகவெளுப்புப் பொருள் கொடுக்கும் முகவெளு
ஜயங்கொடுக்கும் அதன்பின் பக்கத் [ப்பு
தகவெளுப்புச் சுகம்பயக்கும் இடவெளுப்புச்
சந்தானம் தழைக்கும் செல்வ
மிகவளர்க்கும் தனம்பலதா னியம்நல்கும்
வலப்புறத்து வெள்ளை மாதோ.

அரசே, இன்னும் அதனதன் நடை, சாயல், சுழி முதலியவற்றிற்கும் குறைகுணங்கள் உண்டு.

**உத்தரன்** — சரி, அதிருக்கட்டும், குதிரையின் ஆயுள் நிலை எவ்வளவு?

**தந்திரபாலன்** — அரசே, குதிரைக்கு வயது முப்பத்திரண்டு, இதில் பத்துப் பருவங்கள் உண்டு. ஒவ்வொரு பருவமும் மூன்று வருஷம், இரண்டு மாதம், பன்னிரண்டு நாள் என்பர் பெரியோர்.

**உத்தரன்** — தந்திரபாலா, உனது புலமையைக் கண்டு பெரிதும் மகிழ்கின்றேன். என் தந்தையிடம் சொல்லி, உன்னை அசுவசாலைக்குத் தலைவனாக அமர்த்திக் கொள்கிறேன், வா; உன்னோடு வந்த இவன் யார்?

**தந்திரபாலன்** — அரசே, இவன் பெயர் தாமக்கிரந்தி; என்னோடு வாசித்தவன்; பசுவின் லக்ஷணங்களை நன்கு அறிவான்.

**உத்தரன்** — அப்படியா, குதிரைக்கு வல்லவன் ஒருவன் இருக்கும்போது, கோவுக்கு வல்லவனும் ஒருவன் இருக்கவேண்டுவது அவசியந்தானே. நல்லது, தாமக்கிரந்தி, மாடுகளின் வகைகளெல்லாம் உனக்குத் தெரியுமோ?

**தாமக்கிரந்தி** — தெரிந்த மட்டும் சொல்லுகிறேன், அரசே.

சிந்து

குட்டைநாம்பன் வெள்ளிக்கண்ணன் குறுங்கழுத்தன்
கூழைவாலன் வெடிவாலன் வட்டச்செவியன்
மொட்டைத்தலை மோழைக்காளை புள்ளிக்கறுப்பன்
முறிகொம்பன் தறிகொம்பன் சுத்தக்கறுப்பன்
பட்டிக்காளை குன்றுமணிக் கண்ணன் மயிலை
பால்வெள்ளை நாரைக்காளை காலிற்சிலம்பன்
துட்டக்கள்ளன் வளைகொம்பன் ஒற்றைக்கொம்பனும்
குழும்பல மாட்டின்வகை சொன்னேனரசே.

**உத்தரன்** — இத்தனைவகையா! நல்லது, நீயும் வா.
[மூவரும் போகின்றனர்.]



# மூன்றாங் களம்

**இடம் :** *அந்தப்புரம்.*

**காலம் :** *மாலை.*

**பாத்திரங்கள் :** *சுதேஷ்ணை, விரதசாரணி, பிருகந்நளை, கல்யாணி.*

**கல்யாணி** — *அம்மணீ, யாரோ இரண்டுபேர் மாதர்கள் வந்து, தங்களைக் காண விரும்புகிறார்கள்.*

**சுதேஷ்ணை** — *கல்யாணி, யாரவர்கள், வரவிடு.*

*[அர்ஜுனன் பிருகந்நளை என்னும் பெயரை மேற்கொண்டு, திரௌபதிக்கு விரதசாரணி என்னும் பெயரிட்டு அழைத்துக் கொண்டு வருகிறான்]*

**பிருகந்நளை** — *அம்மணீ, நமஸ்கரிக்கிறேன்.*

**சுதேஷ்ணை** — *நல்லது, நீ யார்? எங்கு வந்தாய்?*

**பிருகந்நளை** — *அம்மணீ, என் பெயர் பிருகந்நளை ; நான் நாடகமும் சங்கீதமும் நன்கு அறிவேன். இவள் பெயர் விரதசாரணி ; என்னிடம் பயின்றவள். வண்ணமகளாக இருக்கும் வகைகளெல்லாம் கற்-*

றிருக்கிறுள். இவளைத் தங்கள் ஆதரவில் வைத்து-விட்டுப் போகலாம் என்று அழைத்து வந்தேன்.

**சுதேஷ்ணே** — நல்லது, இருக்கட்டும், பிருகந்நளா, உனக்குச் சங்கீதம் தெரியும் என்கிறுயே, ஒரு பாட்டுப் பாடு, கேட்போம்.

**பிருகந்நளை** — அம்மணி, இதோ பாடுகிறேன்.

**சுதேஷ்ணே** — கல்யாணி, நமது குழந்தை உத்தரையை ஓடி அழைத்து வா.

[உத்தரை வருகிறுள்]

**பிருகந்நளை** —

விருத்தம்

அரும்பொனே மணியேயென் அன்பேயென் அன்பான
அறிவேயென் அறிவி லூறும்
ஆநந்த வெள்ளமே என்றென்று பாடினேன்
ஆடினேன் ஆடி நாடி
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகை கூப்பி
விண்மாரி யென்வெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தே னியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு னுனுமுனை
இடைவிட்டு நின்ற துண்டோ
என்றுநீ அன்றுநான் உன்னடிமை யல்லவோ
யாதேனும் அறியா வெறும்
துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

**உத்தரை** — அம்மா, இந்தப் பாடலும் இசையும் என் மனத்தைக் கவர்கின்றன; நானும் இவ்வகையான பாடல்களைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

**சுதேஷ்ணை**—உனக்குக் கற்பிக்கத்தான் வந்திருக்கிறாள்; உன் இஷ்டம்போல் கற்றுக்கொள்ளலாமே.

**உத்தரை** — அப்படியானால் நான் இவரை இப்பொழுதே அழைத்துக்கொண்டு போகிறேன்.

**சுதேஷ்ணை** — பிருகந்நளா, நமது குழந்தையைக் கொஞ்சம் பரீக்ஷித்துப் பார்.

**பிருகந்நளை** — அப்படியே அம்மணீ; குழந்தாய், ஏதாவது ஒரு கீர்த்தனம் பாடு, கேட்போம்.

**உத்தரை** — (பாடுகிறாள்)

காம்போஜி] **பல்லவி** [ரூபகதாளம்

ஏழைக்குனதருள் செய்யா - தின்னம்
இருப்பதேன் முருகையா (ஏழைக்)

**அநுபல்லவி**

வாழை கமுகு மலர்ச்சோலை சூழும்
வளமிகும் சமராபுரி வாழும்
கேண்மை மும்மல வினையை யகற்றும்
குமார சற்குரு பரனே முற்றும் (ஏழைக்)

**சரணம்**

பெற்றவர் பிள்ளையைக் கைவிடுவாரோ
பேசாதிருந்தால்உனைத் தெய்வமென் பாரோ
சற்றுந் தெரியாதோ யான்படும் பாடும்
சஞ்சல மேஐய னேஎன்று வாடும் (ஏழைக்)

**பிருகந்நளே** — போதும், இது என்ன ராகம்? சொல் பார்ப்போம்.

**உத்தரை** — இது காம்போஜி.

**பிருகந்நளே** — சரி, முக்கிய ராகங்கள் எவை?

**உத்தரை** — அகவல்

மேக விரஞ்சி குறிஞ்சி பூபாளம்
வாருசேர் கைசிகம் வராளி மலகரி
பல்லதி யிந்தோளம் படமஞ் சரியே
நல்ல நாராயணி நாட்டை வசந்தம்
பௌளி சீராகம் பங்காளம் கூர்ச்சரி
கௌளி காந்தாரி காம்போஜி லலிதை
தேவக் கிரியைதே சாக்ஷரி மாளவி
சாவேரி தேசி சாரங்கந் தோடி
இராமக் கிரியைவே ளாவளி பைரவி
குண்டக் கிரியை கூறுதன் னியாசியோ
டொன்றிய நாலெட் டாக வுரைத்தவை
நிலைபெறு தலைமை நெறிப்படு மிசையே.

**பிருகந்நளே** — குழந்தாய், காலை உச்சி மாலை இரவு ஆகிய காலங்களில் முறையே பாடவேண்டிய ராகங்களைச் சொல்லு.

**உத்தரை** —

தேவ காந்தாரி தேசாக்ஷி பாண்டி
தேவக் கிரியை கௌரி பூபாளம்
தன்னி யாசி மாந்தாளி மாருவ
தன்யாசி ஒன்பதும் உதயந் தனக்காம்.

**பிருகந்நளை** — சரி, உச்சியிற்பாட வேண்டியது?

**உத்தரை** — ஆகா சொல்லுகிறேன்.

மேக விர்ஞ்சி சாரங்கம் பல்லதி
வாருசேர் மத்திய மாவதி தேசி
மங்கள பௌளை நீலாம்பரி சிரா
கம் ஓர் எட்டும் உச்சி யதற்காம்.

**பிருகந்நளை** — நன்றாகவே பாடம் செய்திருக்கிறாய். மாலைக்கும், இரவுக்கும் சொல்லு.

**உத்தரை** —

இந்தோளம் தோடி இராமளி கௌளி
பந்து வராளி வராளி உசேனி
சவுராஷ் டிரநா ராயணி மாளவி
நவறு நாயான னத்தினைச் சாரும்.

இரவுக்குரிய ராகங்கள் எனக்கு ஞாபகமில்லை.

**பிருகந்நளை** — இவ்வளவு ஞாபகத்திலிருந்ததே விசேஷம். மறதி என்பது எல்லோருக்கும் உண்டு; நான் சொல்லுகிறேன், அப்போது ஞாபகத்திற்கு வரும். முன்னிரவு, நள்ளிரவு, பின்னிரவு என இரவை மூன்றாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு காலத்திற்கும் வெவ்வேறு ராகங்கள் உண்டு.

இலலிதை காம்போஜி சாவேரி பியாகடம்
வேளா வளியிவை இராமுந்தற் ஜாமம்.
பங்காளம் பௌளம் ஆகிரி நாட்டை
மங்களக் கௌசிகை மனோஹரி குண்டக்

கிரியை கேதார கௌளமோ டெட்டும்
உரிய நிசியின் நடுவினை உறுமே.

சுருட்டி மஞ்சரி ஜோஹினி சித்திர
வேளாவளி கர்னாட்டம் ஒரைந்தும்
வைகுபின் னிரவு மருவிடு மென்ப.

**உத்தரை** — இவைகளில் நான் அதிகம் பழகுவதில்லை.

**பிருகந்நளை** — பழகுவது கஷ்டம், நள்ளிரவும், பின்னிரவும் நன்றாகத் தூங்குங்காலம் அல்லவா — இருக்கட்டும், நீ பாடிய பாட்டு என்ன தாளத்தில் அமைந்தது ?

**உத்தரை** — ரூபகதாளம்.

**பிருகந்நளை** — தாளங்களின் வகைகளைச் சொல்லு.

**உத்தரை** — தாளங்கள் ஏழு : அவற்றின் பெயர்— துருவம், மட்டயம், ரூபகம், ஜம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம் என்பனவாம்.

**பிருகந்நளை** — சரிதான், உனக்குப் பரதம் என்பதன் விவரம் தெரியுமா ?

**உத்தரை** — பரதம் என்றால் — நடனம்.

**பிருகந்நளை**—நடனமல்ல—நான் சொல்லுகிறேன் கேள்.

**விருத்தம்**

பாவமோ டிராகம் தாளமிம் மூன்றும்
பகர்வதால் பரதமென் றுரைப்பர்
ஆவதாம் ஆதி அக்ஷரக் குறியே
அமைந்திடு நாமமா மிதற்கு

இரண்டாம் அங்கம் - மூன்றாங் களம்

மேவிய பாவம் அகத்துறு நினைவை
விளக்கிடல் இராகமோ இசையாம்
தாவறு தாளம் பாவநல் விசைக்குத்
தக்கவா றிசைத்திட ஒலித்தல்.

இப்போது தெரிகிறதா?

**உத்தரை** — நன்றாய்த் தெரிகிறது.

**சுதேஷ்ணை** — பிருகந்நளா, விராடசாரணி இங்கேயே இருக்கட்டும்; நீ நமது குழந்தையுடன் இருந்து அவளுக்குச் சங்கீதமும், அபிநயமும் கற்றுக் கொடு; அந்தப்புரம் போங்கள். [**போகிறார்கள்**]

# முதற் களம்

பாத்திரங்கள் : அரண்மனையை யடுத்த நந்தவனம்.
இடம் : மாலை.
காலம் : விரதசாரணி, சேடியர், சீசகன்.

[விரதசாரணி மற்றும் சேடியரோடு சேர்ந்து நந்தவனத்தில் மலர்கொய்கிருள்]

**இன்பவல்லி** — (விரதசாரணியைப் பார்த்து) அக்கா, இந்த மல்லிகை மலரைப் பார்த்தாயா? இதற்கு என்ன இவ்வளவு மணம்?

**விரதசாரணி** — மலரில் சிறந்தது மல்லிகை யல்லவா, இவ்வளவு வாசனை இல்லாவிட்டால் அவ்வளவு சிறப்பு அதற்கு உண்டாகுமா?

**கல்யாணி** — என்ன, என்ன! மலரிற் சிறந்தது மல்லிகையா? தாமரை என்றல்லோ சொல்லுகிருர்கள்.

**விரதசாரணி** — அது உண்மைதான், திருமகள் தாமரையில் வசிப்பதனுல் அதை மலரிற் சிறந்ததென்று சொல்லுகிருர்கள்; ஆனல், வாசனையில் சிறந்தது மல்லிகைதான்.

**கல்யாணி** — அப்படியா, சரிதான், சரிதான்.

**இன்பவல்லி** — அடி கல்யாணி, இதைக் கேட்கவும் வேண்டுமா! மங்கையர் வாரி முடிப்பது மல்லிகையா, தாமரையா? தாமரை அழகாகமட்டும் இருக்கிறது; இப்படிப்பட்ட வாசனை அதற்கு ஏது? இந்த வீண் பேச்சை எடுத்தாயே, அக்கா அன்று பாடிய பாட்டைப் பாடும்படி கேட்கலாகாதா? இந்த மாலைப்பொழுதில் அந்தப் பாட்டைக் கேட்டால் எவ்வளவு இன்பமாயிருக்கும்!

**கல்யாணி** — ஆமாம் அக்கா, மறந்தே போனேன்; அந்தப் பாட்டைச் சொல்லு, நாங்கள் கற்றுக்கொள்ளுகிறோம்.

**விரதசாரணி** — எந்தப் பாட்டு, நாம் படும் பாட்டுக்கு வேறொரு பாட்டும் வேண்டுமா? ஆட்டும் பாட்டும் அடிமைப்பட்டவருக்கு அடுக்குமோ? ஏதோ ஒரு வேளை அப்படி ஆசைக்கு இடங்கொடுத்தாலும், அதை அதிகமாகப் பாராட்டக் கூடாது.

**இன்பவல்லி** — அப்படிச் சொன்னால் எப்படி அக்கா, இப்பொழுது மாத்திரம் பாடிவிடு.

**விரதசாரணி** — அதற்காவது இன்ன பாட்டு என்று முதல் குறித்தால் சொல்லலாம்; அந்தப் பாட்டு அந்தப் பாட்டு என்றால், எந்தப் பாட்டு என்று பாடுகிறது.

**கல்யாணி** — அந்தப் பாட்டு இந்தப் பாட்டு அல்ல — சொல்லுகிறேன் (யோசிக்கிறாள்) ஆம், 'பல ஜாதி

மலர்கள் கொய்வோம்' என்று ஆரம்பிக்கிறதே அந்தப் பாட்டுந்தான்.

**விரதசாரணி** — அதுவா, சரிதான், பாடுகிறேன், நீங்களும் சேர்ந்து பாடுங்கள். (பாடுகிறார்கள்)

**நாதநாமக்கிரியை] ரகடை [ஆதிதாளம்**

பலஜாதி மலர்கள் கொய்வோம் - வெகு
பண்புடனே மிகு இன்புடன் நாமே (பல)

**மு டு கு**

தண்பரி மளமிகு - சண்பகம் பாதிரி
சந்தா பந்தவிர் - மந்தாரை யதிக
மன்றலு றத்திகழ் - கொன்றை அசோகு
மாறி டாதலரும் - பாரி ஜாதமுடன்
பொன்னளி முரல்சுர - புன்னை வெட்சிநற்
பூங்கொடி யார்மகிழ் - கோங்கு வாகைசெங்
குருந்தி செருந்தி - பொருந்து கடம்பு
கூட்டம தாய்வளர் - கோட்டுப் பூவெனும் (பல)

துல்லிய மல்லிகை - சொல்லரு முல்லை
துங்கமி குஞ்சம் - பங்கி செவ்வரிசேர்
இருவிழி யார்மகிழ் - இருவாட்சி நறுந்
தாதவிழ் பரிமள - மாதவி முதலாய்
முடிக்கே யணிதரு - கொடிப்பூ வென்னும் (பல)

செந்தா மரையுடன் - வெண்டா மரையும்
செங்கழு நீர்மணந் - தங்கிடும் அல்லி
செங்குமு தங்கீ - நங்கிளர் வண்டு

காலாற் றுறைந்தரு - நீலோற் பலமுதல்
பார்ப்போர்க் கழகிய - நீர்ப்பூ வென்னும் (பல)

செந்திரு மகிழ்தரு - சந்திர காந்தி
சீரியர் புகழுயர் - சூரிய காந்தி
வனரஞ்சித மிளிர் - மன ரஞ்சிதமா
மருவளர் காந்தை - திருவளர் தும்பை
சம்பங் கிமுதல் - இன்பந் தருமித்
தலப்பூ வினிலுயர் - நிலப்பூ வென்னும் (பல)

**இன்பவல்லி** — அக்கா, ஒரு சந்தேகம் — இந்த மலர்களுக்கு நிறமும் மணமும் இருப்பது ஏனோ ?

**விரதசாரணி** — வண்டுகளை வசப்படுத்துவதற்காக மலர்களுக்கு மணமும் நிறமும் இயற்கையில் அமைந்திருக்கின்றன.

**கல்யாணி** — இதென்ன, புதுமையாக இருக்கிறது ! வண்டுக்கும் மலருக்கும் என்ன சம்பந்தம். மலர்கள் வண்டுகளை வசப்படுத்துவானேன்? மலரிருந்தால் அதன் மதுவையுண்ண வண்டு தானே தேடி ஓடிவருகிறது.

**விரதசாரணி** — வண்டினால் மலருக்கு உண்டாகும் பயன் கொஞ்சமா ! மலரில் ஆண்மலர் என்றும் பெண்மலர் என்றும் இரண்டு வகையுண்டு. ஆண் மலரிலுள்ள மகரந்தம் பெண்மலரில் சேர்ந்தால்தான் காய் உண்டாகும். இந்த வேலையைப் பெரும்பாலும் வண்டுகளே செய்கின்றன. வண்டு இல்லாவிடில் மலரில் காயுண்டாவது அருமையாக

முடியும். இது அரிய விஷயம். விவரமாக மற்றொரு நாள் சொல்லுகிறேன். காலதாமதம் ஆகிறது; போய் மலர் கொய்யுங்கள். சீக்கிரம் அரண்மனைக்குச் செல்லுவோம்.

**இன்பவல்லி** — அப்படியே செய்யலாம் — நல்ல மலர்களை நாடிக் கொய்வோம்.

[பிரிந்து சென்று மலர் கொய்கிறார்கள்; கீசகன் அவ்வழியே வருகிறான்]

**கீசகன்** — ஆஹா, இது யார்! மற்றும் இரண்டு மாதர் மலர் கொய்கின்றனர். அவர்கள் இருவரும் நமது தமக்கையின் பாங்கியர். இந்த மாது யாவள்? ஆஹா, என்ன அழகு! என்ன ஒயில்! அழகே ஓர் உருக்கொண்டு வந்ததோ!

விருத்தம்

தாரகை நடுவண் மேவும்
தனிமுழு மதியம் போல
நேரிழை இருவர் சூழ
நின்றிடும் இந்த மாது
சீரிய தேவ மாதோ
திகழும்இப் பூவின் மாதோ
தேரிடின் இவளே மாதர்
திலகமென் றியம்ப லாமே.

இவள் அழகிற் சிறந்த அரம்பையோ! உருவிற் சிறந்த ஊர்வசியோ! வரையுறை தெய்வமோ! நீருறை தெய்வமோ! அன்று, அன்று.

கலித்துறை

பஞ்சே எனத்தகும் மெல்லிய பாதமிப் பாரதனில்
செஞ்சே படிந்து விளங்கின செவ்வரி சேர்விழிகள்
அஞ்சே லெனநம்மைத் தேற்றுதல் போலிமை யாடுவதால்
நெஞ்சே இவளிப் புவிமிசை வாழ்ந்திடும் நேரிழையே.

ஆமாம், நாம் ஒருபோதும் இவளை இங்கே கண்டதில்லையே. இவளது உருவை உற்று நோக்கினால் வண்ணமகளென்றும் மதிக்கக் கூடவில்லை. என்ன ஆச்சரியம்! இவள்யாராக இருக்கலாம்.(பாடுகிறான்)

காம்போஜி] பல்லவி [ஆதிதாளம்

இங்கெதி ராகநிற்கும் மங்கையர்க்கரசி
யாரோ என்ன பேரோ (இங்கெதி)

அநுபல்லவி

கொங்கல ருஞ்சோலை யிலே யொருகாலே
கும்பிடப்போன தெய்வம் குறுக்கேவந்ததுபோலே
(இங்கெதி)

சரணங்கள்

சந்திர பிம்பமுக வொளி மின்ன - பசுந்
தங்கமிவள் மெய்யதிசய மென்ன
கந்தமலர் வாளி யனங்கனும் வந்து சுற்றக்
கண்களிப்பாகத் தெய்வப் பெண்களுங்கண்டுநத்த
(இங்கெதி)

சோதிமின் னிடைக்கொடி யிலங்க - சித்ரத்
தோகைமா மயிலியல் இலங்க

மூன்றும் அங்கம் - மூன்றும் களம்

காதலாவாக வேடிக் கலகமிடும் இரண்டு
காவி விழிகளாலென் ஆவியைக்கொள்ளைகொண்டு

(இங்கெதி)

**இன்பவல்லி** — (திடுக்கிட்டு) யாரது ? (திரும்பி) அரசே, வந்தனம் செய்கிறேன்.

**கீசகன்** — இன்பவல்லி, அதோ மலர் கொய்யும் அப் பெண்மணி யாவள் ?

**இன்பவல்லி** — அரசே, அவள் நமது அரசியாருக்கு அலங்காரம் செய்யும் வண்ணமகள். வந்து ஒரு வாரமாகிறது ; மலர்கொய்ய எங்களோடு இங்கே வந்தாள்.

**கீசகன்** — இவள் இன்னும் கன்னிகைதானோ ?

**இன்பவல்லி** — அப்படித்தான் காண்கிறது ; உண்மை தெரியாது, அரசே.

**கீசகன்** — இவளைப் பார்த்தால் வேலை செய்து பிழைப்பவள்போல் காணவில்லையே !

**இன்பவல்லி** — அரசே, ஏதோ ஒரு கால வித்தியாசத்தினால் இங்கு வந்திருப்பதாகத் தெரிவித்திருக்கிறாள் ; மற்ற விவரம் எங்களுக்குத் தெரியாது.

**கீசகன்** — சரி, இருக்கட்டும், இதில் ஏதோ அந்தரங்கம் இருப்பதாகத் தோன்றுகிறது. அதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். நீங்கள் அவள் அறியாமல் அரண்மனைக்குச் செல்லுங்கள்.

**இன்பவல்லி** — அப்படியே செய்கிறோம், அரசே.

[சென்று கல்யாணியை அடைகிறாள்]

**கல்யாணி** — இன்பவல்லி, என்னடி, அக்கா எங்கே? நீ மாத்திரம் வந்தாயே, நேரமாய் விட்டதே, அரண்மனைக்குப் போகவேண்டாவோ ?

**இன்பவல்லி** — இல்லை, கீசக மஹாராஜா வந்தார், அவர் அவளோடு ஏதோ பேசவேண்டுமாம்; அதற்காக நம்மிருவரையும் உடனே அரண்மனைக்குப் போகச் சொன்னார்.

**கல்யாணி** — அதென்ன தனித்துப் பேசுவது! மலர் வனத்தில் மங்கையரோடு என்ன பேச்சு? அவர் சொல்வது ஏதோ சூதாக இருக்கிறதே! என்னடி அவளை இப்படி அல்லலில் விட்டுவிட்டு வந்துவிட்டாயே !

**இன்பவல்லி** — அடி கல்யாணி, ஏண்டி இரைந்து பேசுகிறாய்? அவர் பேச்சுக்கு மறு பேச்சும் உண்டோ; உனக்குத் தெரியாதா இது; கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்; சொன்னபடி செய்யலாமே; போவோம், வா.

**கல்யாணி** — ஐயோ! 'பெண் பாவம் பெரிய பாவம்' நாம் என்ன செய்யலாம்! நீ சொல்லுவதும் சரிதான் — வா போவோம்.

[போகின்றனர்]

**கீசகன்** — (விரதசாரணியை அணுகி) ஆஹா! இந்த மாதவிக் கொடிக்குப் புதியதோர் மணமிருந்தன்றோ இவ்வளவு சிறந்து விளங்குகிறது! அதை அடுத்து

நிற்கும் இந்த மாதவிக் கொடிக்கும் புதியதோர் மணமிருந்தால் எவ்வளவு சிறந்து விளங்கும்!

**விரதசாரணி** — யாரிது! மாதவிக்கொடி என்றும், மாதவக்கொடி என்றும் குறிப்பாகப் பேசுகிறூர்; நமது கல்யாணிதான் தன் குரலை மாற்றிப் பேசுகிறளோ!

**கீசகன்** — (புன்சிரிப்புடன் முன் வந்து) கல்யாணி யல்ல; உன்னிடம் கல்யாணம் பெற வந்த நானே அவ்வாறு பேசினேன்.

**விரதசாரணி** — யாரிது! அடி கல்யாணி, இன்பவல்லி, எங்கே போனீர்கள்! என்னைக் காட்டிக் கொடுத்து வேடிக்கையா பார்க்கிறீர்கள்?

**கீசகன்** — வேடிக்கை என்ன, ஒருவர் ஒருவரோடு பேச வந்தால், மற்றவர்கள் அவ்விடத்தை விட்டு அகன்று போவது வாடிக்கைதானே.

**விரதசாரணி** — என்னோடு உமக்கு என்ன பேச்சு? நீர் யார்?

**கீசகன்** — யான் இன்னுனென்று உனக்கு இன்னும் தெரியாதா? என் தமக்கைக்கு நீ வண்ணமகளாக அமைந்தும், என் பெயரையும் பராக்கிரமத்தையும் கேட்டதில்லையா?

**விரதசாரணி** — ஐயா, அவற்றையெல்லாம் தெரிந்துகொள்வது எனது காரியமும் அன்று, கருத்தும் அன்று.

**கீசகன்** — சரி, இது வரையில் இல்லாதிருந்திருக்கலாம்; எனக்கு உன்னிடத்தில் கருத்தும், காரியமும் உண்டானபோது, உனக்கும் என்னிடத்தில் உண்டாவது அவசியமல்லவா?

**விரதசாரணி** — இந்த வார்த்தை உமக்குத் தகாது, பெயரும், பராக்கிரமமும் உள்ளவர் என்கிறீரே, அந்தக் குணங்களுக்கு ஏற்க நடக்கை இருக்க வேண்டாவோ?

**கீசகன்** — நடக்கை யில்லை யென்று நினைக்கிறாய்? நீ என் மனநிலையை அறியாமல் பேசுகிறாய்.

**விரதசாரணி** — நானா அறியாமல் பேசுகிறேன்!

[பாடுகிறாள்]

ஆரபி] **பல்லவி** [ஆதிதாளம்

சரி யாமா — பழிபோமா

**அநுபல்லவி**

தகாத செயல் அறமாமா (சரி)

**சரணம்**

அன்னிய மாதரின் ஆசை யுண்டாகி
அழிந்தவர் தம்மையே யூகி — இதை
அறிந்தவ னோநல் விவேகி
அவிவேகி — துஷ்டத்துரோகி (சரி)

**கீசகன்** — பெண்மணீ, இப்படி யெல்லாம் பேசாதே; உன் தூஷணமெல்லாம் எனக்குப் பூஷணமாகத் தோன்றுகிறது. நான் சொல்வதைக் கேள், நீ சுகப்படுவாய்.

## மூன்றாம் அங்கம் - முதற்களம்

**விரதசாரணி** — **விருத்தம்**

அன்னிய மாத ராசை
அறிவினை யழிக்கும் தூய
அன்னிய மாத ராசை
அழிவிலாப் பழியுண் டாக்கும்
அன்னிய மாத ராசை
அல்லலில் புகுத்திக் கொல்லும்
அன்னிய மாத ராசை
அருநர கமர்த்தும் ஐயா.

**கீசகன்** — இதெல்லாம் வீண் வார்த்தை; காதலிருவர் கருத்து ஒருமித்தலே இன்பமாகும். பெண்மணி, ஐயா என்ற வாயால் அன்பா என்று அழைத்தால் அதனினும் நான் பெறத்தக்க பேறு வேறொன்றும் உண்டோ!

**விரதசாரணி** — **விருத்தம்**

நிலையிலா இன்பந் தன்னை
நிலையெனக் கொண்டு மாய
வலையினில் சிக்கி மாளும்
மச்சமே போல மாளல்
விலையிலாக் கீர்த்தி யோடு
வீரமும் எய்தி நல்ல
கலையெலாம் உணர்ந்து அவற்றின்
கருத்தினை யுணர்ந்தோர்க் காமோ.

**கீசகன்** — கண்மணி, பழைய கதையையே திருப்பித் திருப்பிப் படியாதே; நான் சொல்வதைக் கேள், உனக்குச் சுகமுண்டு.

**விரதசாரணி** — எனக்கா சுகமுண்டு — அதைப்பற்றி உமக்கேன் கவலை. நீர் சொல்வதைக் கேட்கவும் நேரமில்லை; நான் போக வேண்டும்.

**கீசகன்** — போக வேண்டுமா? எங்கே போவாய்?

**தோடி]** **பல்லவி** **[ரூபகம்**

தப்பி யோடிப் போகவிடுவேனோ - இனி
தையலே நீ

**அநுபல்லவி**

இப்படியே யிந்தக் காலமிருக்குமென்
றெண்ணாதே பிகுவு பண்ணாதே நில் நில் நில் (தப்)

**சரணம்**

எப்படித் தப்பித்துக் கொள்வாய் நீ நித்தியம்
எங்கே போனாலும் வருவேன் அகத்தியம்
தப்பாமல் உன்னைக்கொள்வேன்பார் சாமர்த்தியம்.
சத்தியம் சத்தியம் முக்காலும் சத்தியம் (தப்பி).

**விரதசாரணி** — தலை தெரியாமல் சன்னதங் கொள்ளாதீர்; விரல் உரலானால் உரல் என்ன ஆகும்!

**கீசகன்** — கண்மணீ, வேண்டா, இன்னும் பொறுக்கிறேன்; பேதைமையால் பிடிவாதம் செய்யாதே!

**விரதசாரணி**—நீரா பொறுக்கிறீர், எனக்கா பேதைமை! இனி உமக்குப் பதில் சொல்வதும் தகாது.

**[விரைந்து போகிறாள்]**

**கீசகன்** — தகாதா — எங்கேதான் போகப் போகிறாய், பார்க்கிறேன்.

## இரண்டாங் களம்

**இடம் :** அந்தப்புரம்.

**காலம் :** மாலை.

**பாத்திரங்கள் :** விரதசாரணி, சுதேஷ்ணை, கீசகன்.

[விரதசாரணி அலங்கோலமாக ஓடி வருகிறாள்]

**சுதேஷ்ணை** — என்ன இது! ஏன் இப்படி அலங்கோலமாக ஓடி வந்தாய்?

**விரதசாரணி**—அம்மணீ, அம்மணீ! நான் என்னென்று சொல்லுவேன்!

**சுதேஷ்ணை** — என்ன சங்கதி? உன்னோடு சேர்ந்து வந்த சேடியர் எங்கே?

**விரதசாரணி** — அம்மணீ, அவர்கள் என்னைத் தனியே விட்டு எங்கேயோ போய்விட்டார்கள்.

**சுதேஷ்ணை** — உன்னைத் தனியே விட்டுப் போய்விட்டார்களா? அதற்காகவா இப்படிப் பயந்து ஓடி வந்தாய்? நமது நந்தவனத்தில் உனக்கென்ன பயம்?

**விரதசாரணி** — பயமொன்று மில்லே — அம்மா, நான் என்னென்று சொல்லுவேன்!

**சுதேஷ்ணை** — பயமில்லாவிட்டால் இப்படி உடல் நடுங்க ஓடிவருவானேன்? கண்ணில் தண்ணீர் கலங்குவானேன்? விரதசாரணி, என்ன நேர்ந்தது — ஒன்றும் ஒளியாமல் சொல்லு.

**விரதசாரணி** — அகவல்

அம்மணீ யந்த அனியா யத்தை
உம்மிடம் எவ்வாறு உரைப்பேன் அந்தோ

**சுதேஷ்ணை** — என்னிடம் சொல்ல உனக்கு என்ன பயம்? பயப்படாமல் சொல்லு, யார் என்ன செய்தார்கள்?

**விரதசாரணி** —

மலர்வனந் தன்னை மகிழ்வுடன் அடைந்து
பலவகை மலரைப் பறித்திடும் போழ்து
அச்சமில் லாமல் ஆடவர் ஒருவர்
இச்சையால் மெல்ல என்னிடம் அணுகி —

ஐயோ, அம்மணி, என் விதியை என்னவென்று சொல்லுவேன்! சொல்லவும் கூடவில்லையே!

**சுதேஷ்ணை** — வருந்தாதே, நடந்ததை வெளியிடு; நந்தவனத்தில் வந்தவன் யார்? வந்து உன்னிடம் என்ன சொன்னான்?

**விரதசாரணி** —

மாதவக் கொடியே மணந்திடென் றுரே.

**சுதேஷ்ணை** — ஆ, என்ன அநியாயம்! அவ்வளவு நெஞ்சு உரத்தவன் யார்?

**விரதசாரணி** —

நீதொன் றிலாத தேவீ அவரை
நீர்யார் என்று நெறியுடன் கேட்டேன்
பேர்கீ சகனெனப் பேசினார் அம்மா

[சுதேஷ்ணை தலை குனிகிருள் ;
கீசகன் அங்கு ஓடிவந்து]

**கீசகன்** — பெண்மணி, இதோ வந்தேன் ! இன்னும் எங்கே போகப் போகிருய் ?

**சுதேஷ்ணை** — கீசகா, என்ன இது ! நீயா இப்படிச் செய்தாய் ! நன்று யிருக்கிறது.

**கீசகன்** — இப்போது தப்பித்துக் கொண்டாயோ ?

**சுதேஷ்ணை** — (கோபித்துப் பாடுகிருள்)

அசாவேரி] **பல்லவி** [சாப்பு

கீசகா இனி இந்த வழி வராதே
கேடுவருந் தப்பாதே (கீசகா)

**அநுபல்லவி**

பேசு மன்னவர் எவர்களுங்கிலி
பிடித்து நடுங்கிட அமர்செ யும்புலி
வாச மச்சநாட் டினிலொன் றுண்டென்று
மதிக்கும் பெரும்புகழ் மறைந்து போச்சுதின்று
(கீசகா)

**கீசகன்** — மறைந்து போய்விட்டதோ ?

**சுதேஷ்ணை** — போகாமல் இன்னுமா இருக்கிறது! ராஜ நீதி தவறினுல் ராஜ்யம் ஏது !

கீசகன்

**சரணம் — 1**

சீலமனு விக்கியான நூலின் வழிதப்பாது
செங்கோல் மன்னர்நடந்தால் தீதில்லை புவிமீது
வேலி பயிரைமேயும் விதமாகக் கொடுந்தீது
வேந்தரே செய்திடில் வேறொரு கதியேது

நாலு பேர்களும் பழிக்க லாச்சுது
நம்பு மெங்கள்மனத் தெண்ணம் போச்சுது
கேலி யாமிந்தப் பழிப்பெங் கேபோகும்
கெட்ட பால்நல்ல பாலெப் படியாகும்

(கீசகா)

**கீசகன்**—கெட்டபால் ஆனால் ஆகிறது, உனக்கென்ன:

**சுதேஷ்ணை** — நீ கெட்டால் அதோடுபோகிறதா —

**சரணம் — 2**

பெய்யென மழைபெய்யும் கற்பின்மங் கையர்மனம்
பேதித்தொன்று சொன்னால் நிற்குமோர் துரைத்தனம்
மையலா லுன்னைப்போரல் மதிமயங் கிக்கனம்
மாறிக்கெட் டோரிந்த வமிசத்தி லிலேமுனம்

ஐயோர மாந்தர் இவ் வெண்ணத் தால்மறு
அடைந் தொடுங்கின தறிந்தும் நீ சிறு
பையல் சேஷ்டையால் செய்தாய் வெகுநேர்த்தி
பார்த்தி பன்தனக் கிதுவே அபகீர்த்தி

(கீசகா)

**கீசகன்** — அபகீர்த்தி எனக்குத்தானே.

**சுதேஷ்ணை** — உனக்குமட்டுமென்று நினைக்கிறாய் —

**சரணம் — 3**

கொட்டங் குலைந்திடநீ உத்தமி தன்மேலே
கொண்டவள் வாய்வசை கொண்டா யதுமண்மேலே
வட்டுவத் தின்மீது சொட்டுப்போட் டாற்போலே
வம்சந்தனக் கெல்லாம் வந்ததே ஒருகாலே
கொட்டும்தேளைப்பிள்ளைப்பூச்சியென்றெண்ணும்
கொடிய ரைத்தெய்வம் தண்டனை யேபண்ணும்
தொட்ட நோய்க்குண்டு மருந்து கொடும்விதி
தொலைய மருந்தேது இதுவோ உன்விதி
(கீசகா)

**கீசகன்** — சரி, என் விதியை விலக்க உன்னால் ஆகப்போகிறதா — இருக்கட்டும் பார்க்கிறேன்.

[விரைந்து திரும்பிப் போகிறான்]

**சுதேஷ்ணை** — விரதசாரணி, வருந்தாதே; அவன் மதி மயங்கிப் பேசுகிறான். உனக்கொன்றும் குறைவு வாராது.

**விரதசாரணி** — அம்மணி, நானோ அநாதை; தங்கள் அடிமை; என் மானத்தைக் காப்பது தங்கள் கடமை. பெண்கள் நிலைமை தாங்கள் அறியாததல்ல — அம்மணி, அடிமையாக அடைக்கலம் புகுந்தேனே!

**சுதேஷ்ணை** — விரதசாரணி, வருந்தாதே; நீ அவனுக்காக அஞ்சவேண்டா. உற்றாரானால் என்ன, ஊராரானால் என்ன, குற்றம் குற்றந்தானே — சென்றதைக் குறித்துச் சிந்திக்காதே — அவனும் அவ்வளவு துஷ்டனல்ல, ஏதோ காலவித்தியாசம்.

அவன் இவ்வளவு மதிமயங்கியது எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. அதை விட்டுவிடு, நீ போய் மாலை கட்டு.

**விரதசாரணி** — (தனியே) ஐயோ, இதென்ன காலம்! உழைத்துப் பிழைக்க வந்தவிடத்தும் ஊழ்வினை நுழைந்து வருத்துகிறதே! இருதலைக் கொள்ளி எறும்புபோல்ஆனேனே! இந்தநிலையை யாருடன் சொல்லி ஆற்றிக்கொள்வது. அவனோ அரிய வீரனும்; அரசாட்சியே அவனால் நிலைக்கிறதாம். என்ன செய்வது — இவன் உபத்திரவத்தை எப்படிப் போக்கிக்கொள்வது — திக்கில்லார்க்குத் தெய்வமேதுணை யென்கிறார்களே; அது எனக்கு இல்லையா. ஐயோ, இந்த விஷயம் ஐவரில் ஒருவர் காதுக்கு எட்டினாலும் அனர்த்தமாக முடிந்துவிடுமே! பட்ட கஷ்டமெல்லாம் பாழாய்விடுமே! பெண் கலகம் பெரிய கலகம் என்று உலகத்தார் பேசுவார்களே — சுதேஷ்ணை இவ்வளவு சொன்னாளே, பார்ப்போம்; வெந்நீரில் வீடு வெந்துவிடுமா!

[போகிறாள்]



3105

## முதற் களம்

**இடம் :** கீசகன் சயனக்கிருகம்.
**காலம் :** இரவு.
**பாத்திரங்கள் :** கீசகன், பாங்கன்.

[கீசகன் தன் மஞ்சத்தின்
மீது படுத்துக்கொண்டு]

**கீசகன்** — ஆஹா! என் அறிவெங்கே, ஆண்மையெங்கே! வீரமெங்கே, வெற்றி எங்கே! யாவும் பறந்து சென்று, அப்பாவைக்கே அடிமையாயின. இனி இவ்வுலகில் எனக்கு என்ன புகழுண்டு!— ஏ விரதசாரணி, நீ என்னைக் கடைக்கணித்துப் பார்க்கலாகாதா! எங்கும் உன் உருவமே தோன்றுகிறதே! ஏ பெண்மணீ, இதோ என் கண்மணியாக விளங்குகின்றாயே! கண்ணிற் படும் உருவம் கையிற் பட லாகாதா—ஐயோ இப்படியும் மதி மோசம் போகலாகுமோ! மனம் சென்ற வழியெல்லாம் செல்வது மாண்பாகுமா! அது மன்னவர்க்கு அழகா! வீரருக்கு ஏற்றதா? சத்துருக்களைப் போர்க்களத்தில் புறங்காண்பது வெற்றி-

யன்று; தன் மனத்தைத யடக்கி வெல்லுவதே வெற்றி—பெண்பாவம் பெரியபாவம்! பெண்மணீ, இனி ஒருகாலும் உன்னை வருத்தத்துக்கு உட்படுத்த மாட்டேன், இது சத்தியம்.

[பாங்கன் வருகின்றான்]

**பாங்கன்** — (தனியே) என்ன இது, நம் அரசர் வருந்துகின்றார். கருத்தைக் கவனித்தால் காதல் நோய்போல் காண்கிறது. இன்று ஏதோ இவர் செய்கை முற்றும் மாறியிருக்கிறது. நடையுடை பாவனைகளெல்லாம் விசித்திரமாக இருக்கின்றன. நம்மைக் கண்டாலும் காணாதவர்போல் சென்று மறைந்துவிடுகிறார். ஒருவேளை நாம் ஏதாவது குற்றம் செய்தோமோ—நம் அறிவுக்கு எட்டியவரையில் ஒன்றையும் காணோமே. மற்றவர்களிடத்திலும் இவர் இப்படித்தான் இருக்கிறார். இரவெல்லாம் பகலென்றெண்ணித் திரிகிறார்; பகல் முழுதும் இரவாகக் கதவடைத்துக்கொண்டு உறக்கம்பிடித்தவர்போலிருந்தார்; என்ன காரணம்!

**கீசகன்** — பெண்மணீ, நீ என் எதிரே நிலைத்து நிற்கின்றாயே, அருகில் வந்து, உன் இனியகுரலுடன் ஒரு வார்த்தை சொல்லலாகாதா!

**பாங்கன்** — அரசே, வந்தனம்.

**கீசகன்** — யாரது? (திரும்பி), பாங்கனா! நல்லது, என்ன விசேஷம்?

**பாங்கன்** — விசேஷம் ஒன்றும் இல்லை, தங்களைக் கண்டதே விசேஷம்.

**கீசகன்** — பாங்கா, ஒரு விஷயம் சொல்லுகின்றேன், கவனமாகக் கேள்.

**பாங்கன்** — அப்படியே, சித்தமாக இருக்கிறேன்.

**கீசகன்** — மறுத்துப் பேசாதே, ஆம் என்று ஒப்புக்கொள்.

**பாங்கன்** — அரசே, விஷயத்தை யறியாமல் நான் எப்படி ஒப்புக்கொள்வது?

**கீசகன்** — அப்பொழுதே சொன்னேனே, மறுக்காதே.

**பாங்கன்** — சரி, அப்படியே; விஷயத்தை வெளியிடுங்கள்.

**கீசகன்** — (**ரகசியமாக**) உலகத்தில் உத்தமன் ஒருவனும் இல்லை; இது உண்மை! போய் வருகிறேன், பொழுது விடிந்தது.

**பாங்கன்** — பொழுது விடிந்ததா! என்ன வியப்பு! அரசே, ஒரு வார்த்தை.

**கீசகன்** — சீக்கிரம் சொல்லு.

**பாங்கன்** — இப்பொழுது எங்கே இவ்வளவு விரைவாகப் போகிறீர்? பொழுது சாய்ந்து இன்னும் இரண்டு நாழிகைகூட ஆகவில்லையே, விடிந்தது என்கிறீரே.

**கீசகன்** — அப்படியா! எப்படியானால் என்ன? நேரமாயிற்று, நான் வருகிறேன்.

**பாங்கன்** — விடிந்தாலும் சாய்ந்தாலும் ஒன்றுதானோ? அரசே, இது என்ன கோலம்! தமது மனத்தை

இப்படி வருத்தும் துன்பம் யாது? என்னிடம் வெளியிடலாகாதா?

**கீசகன்** — பாங்கா, வெளியிடத் தடையில்லை; ஆனால், அதன் பொருட்டு நீயும் வருந்துவாய்; என்-பொருட்டு நீ வருந்த, உன்பொருட்டு நான்வருந்த, இப்படியே இவ்வருத்தத்துக்கு வரையறை ஏற்படாமல் போகும். வேண்டா, நான் வருகிறேன்.

**பாங்கன்** — என்னுடன் உரைக்கலாகாதோ, எங்கே போகிறீர்?

**கீசகன்** — அதைத்தான் நானும் யோசிக்கிறேன் —

**பாங்கன்** — சரி, சரி, 'அவசரம், போகவேண்டும்' என்கிறீர்! எங்கே என்றால், 'யோசிக்கிறேன்' என்கிறீரே — அரசே, எல்லாம் எனக்குச் சொல்லாமலே விளங்கிற்று.

**கீசகன்** — என்ன விளங்கிற்று?

**பாங்கன்** — உண்மையை உரைக்கவோ?

**கீசகன்** — ஏன் கேட்கிறாய், உடனே சொல்லு.

**பாங்கன்** — வேந்தர் மனம் வேட்டைமேல் சென்-றிருக்கிறது. வேட்டையாடக் காட்டிற் சென்ற மனத்தை மீட்டுவர யாரால் முடியும்!

**கீசகன்** — பாங்க, ஏன் என்னை இவ்வாறு ஏளனஞ் செய்கிறாய்? தீங்கு நேர்ந்த காலத்தில் தாங்கிக் கொள்வதே பாங்கன் தொழில் என்பது உனக்-குத் தெரியாதா?

## நான்காம் அங்கம் - முதற் களம்

**பாங்கன்** — இதைத்தான் நானும் இது வரையில் எதிர்பார்த்தேன்! தங்களுக்கு என்ன தீங்கு?

**கலித்துறை**

தலங்காணுங் கல்மலை வங்கெதிர்
நின்று சம்ரஞ்செயினும்
பிலங்காணும் ஆழ்கடல் மேல்வரப்
பொங்கிப் பெருகிடினும்
நிலங்காணுங் கீர்த்தி பெறுவீர
மற்றென்ன நேர்ந்திடினும்
கலங்கா மனமும் கலங்கிநின்
றுமென்ன காரணமே.

**கீசகன்** — பாங்கா, என் மன நிலையை என்னவென்று சொல்லுவேன்; நான் மகா பாவி, ஒரு பெண்மணியை மனங் கலங்கச் செய்தேன், மதியிழந்தேன், மானமும் அழிந்தேன்.

**பாங்கன்** — அரசே, தயைசெய்து விஷயத்தை வெளியிடும்; அப் பெண்மணியைக் கனவில் கண்டு கலங்குகின்றீரோ!

**கீசகன்** — கனவில் காணவில்லை, நனவிலேயே கண்டேன். பாங்க, நீ என் பாங்கிலிருந்து அவளைக் கண்டிருந்தால், நீயும் ஏங்கி நின்றிருப்பாய்.

**பாங்கன்** — நான் ஏங்கியும் இருப்பேன், தூங்கியும் இருப்பேன். அரசே, என்னோடு தங்களை ஒப்-

பிடுவது எப்படி? யானை எங்கே—எறும்பு எங்கே, மலை எங்கே — மண்ணாங்கட்டி எங்கே!

**கீசகன்** — பாங்க, ஒப்புமை கூறவில்லை. உருவத்தின் சிறப்பை உரைக்க அவ்வாறு கூறினேன்.

**பாங்கன்** — அரசே, தங்களுக்கு இவ்வளவு காதலை மூட்டிய பெண்மணி யார்? அடியேன் அறியக் கூடுமோ? அவளுக்கு நீர் என்ன தீங்கிழைத்தீர்?

**கீசகன்** — நான் விதிவசத்தால் அப் பெண்மணியை நமது நந்தவனத்தில் கண்டேன்; கண்டு காதல் கொண்டேன்; என் மனத்தை அடக்க ஆண்மையின்றி, அவ் வுத்தமியை அணுகினேன்; அணுகி, என் காதலை வெளியிட்டேன்; வெகுளியால் வெருட்டினேன், துரத்தினேன், துன்புறுத்தி- நான் என்ன சொல்லவேண்டும்!

**பாங்கன்** — நமது நந்தவனத்திலா — என்ன் ஆச்சரியம் — அரசே, யார் அப் பெண்மணி?

**கீசகன்** — அவளைப் பெண்மணி யென்றால் போதாது; அவளுக்கு உபமானமாகச் சொல்லவும் உலகில் ஒரு பொருளுண்டோ.

விருத்தம்

அல்லொக்கும் கூந்தல் தன்னை
அறலொக்கும் என்றிட் டாலும்
வில்லொக்கும் புருவந் தன்னை
மேலொக்கும் என்றிட் டாலும்

சொல்லொக்கும் பொருள் ஒவ்வாது
சொல்லிடின் உலகி லிந்தப்
புல்லுக்குக் கற்ப கத்தைப்
பொருந்திடச் சொன்ன தாமே.

**பாங்கன்** — அரசே, சரிதான், எழுவாய் இல்லாமல் பயனிலையைச் சொன்னால் என்ன விளங்கும்?

**கீசகன்** — எழுவாயா வேண்டும், பாங்க, நமது தமக்கைக்கு வண்ணமகளாக வந்துள்ள மாதை நீ கண்டதில்லையோ?

**பாங்கன்** — ஓஹோ சரிதான், விரதசாரணியா — ஆம அழகிதான், பார்த்தால் உத்தம குணங்கள் உள்ளவாளாகத்தான் காண்கிறது. இருக்கட்டும், அவள் கேவலம் ஒரு வண்ணமகள் தானே! நமது அரண்மனையில் நம்மை அண்டிப் பிழைக்கும் தோழிதானே! அவளுக்காக ஏன் இவ்வளவு கவலை, தங்கள் உயர்வு எங்கே — அவள் தாழ்வு எங்கே!

**கீசகன்** — நீ இவ்வாறு கூறுவாய் என்று முன்னமே அறிவேன். அழகையும் குணத்தையுமே பார்க்க வேண்டும், நிலைமையைப் பற்றி நினைக்கலாமோ!

**பாங்கன்** — சரி, இருக்கட்டும், அதது அவரவர் மனோபாவத்தைப் பொறுத்தது; இதற்கேன் இவ்வளவு வருத்தம்?

**கீசகன்** — பாங்க, நான் என் விருப்பத்தை அடக்க என்னால் கூடியமட்டும் முயன்றேன், முடியவில்லை.

என் சகோதரியும் என்னை வெறுத்து உரைத்தாள். இனி என் உயிர் இருந்து என்ன பயன்!

**பாங்கன்** — அரசே, தாங்கள் இந்த அற்ப விஷயத்தின்பொருட்டு இவ்வளவும் வருந்த வேண்டுமோ; இதைப் பாங்குபெற முடித்து, பாங்கன் என்னும் பெயரை நான் நிலைநாட்டுகிறேன்; பாரும்.

**கீசகன்** — ஐயோ, வேண்டா, இன்னுமா அந்தப் பெண்மணியைத் துன்புறுத்துவது! அதைவிட நான் என்னுயிரை மாய்த்துக்கொள்வதே நலம்.

**பாங்கன்** — அரசே, இது வீண் யோசனை, விட்டொழியும், நான் போய் வருகிறேன்.

**கீசகன்** — பாங்க, வேண்டா, நான் சொல்வதைக் கேள்; இது கூடாத காரியம்; மனத்தைச் சென்ற வழியெல்லாம் விடுவது பேதைமை; இது வீரத்திற்கு அழகன்று. ஆஹா, என் சித்தம் சிதைந்து போயிற்றே!

**பாங்கன்** — அரசே, வீணே வருந்தவேண்டா; சற்று அமைந்திரும், நான் போய் வருகிறேன்.

[போகிறான்.]

## இரண்டாங் களம்

**இடம் :** அந்தப்புரம்

**காலம் :** காலை

**பாத்திரங்கள் :** சுதேஷ்ணை, இன்பவல்லி, கல்யாணி

— —

**சுதேஷ்ணை**—(*தனியே*) அண்டிப் பிழைப்பவர்களை அல்லற்படுத்தலாமா — அநாதவராக இருப்பவர்களை ஆதரிப்பது அரசர் கடமை. அவர்களை அலக்ஷியப்படுத்தி, இவ்வாறு செய்வது யாருக்குத்தகும். ஏழை அழுத கண்ணீர் எழு பிறப்பும் தாக்கும் என்பார்களே. ஐயோ, ஏன் இப்படிச் செய்தான்—இருக்கட்டும், என்னதான் நடந்திருக்கும். அவன் வாய்மொழியைக் கேட்காமலே கண்டபடி பேசிவிட்டோமே! எவ்வளவு பேசினேம், ஏதாவது தடுத்துச் சொன்னனு! எவ்வளவு வருந்தியிருப்பான்! தனியாகவாவது கண்டித்தோமா—அவளெதிரிலேயேபேசிவிட்டோமே, அவள்தான் அவனை என்னவென்றெண்ணிமதிப்பாள். அவன் இதுவரையில் இப்படிப்பட்ட விஷயம் ஒன்றும் செய்தவனல்லவே; அதையாவது சிறிதுயோசித்-

தோமா — பெண் புத்தி பின் புத்தி என்பார்-களே; அதற்கு நானே திருஷ்டாந்தமானேனே— இவள் சொன்னதுதான் என்ன நிஜம் — கூட இருந்த தோழிகளையாவது விசாரித்தோமா— ஐயோ, அவன் என்னென்ன நினைக்கிறனே! அவன் அடங்க அடங்க எனக்கு ஆக்ருஷமே மேலிட்டதே. அவன் வீரத்தையெல்லாம் ஒடுக்-கிக்குன்றி நின்றுவிட்டானே. [கல்யாணி வருகிறுள்]

**கல்யாணி** — அம்மா, நேரமாகிறதே, தாகத்திற்குக் கொண்டு வரட்டுமா?

**சுதேஷ்ணை** — அது இருக்கட்டும், இங்கே வா; அவள் எங்கே இன்பவல்லி?

**கல்யாணி** —அதோ இருக்கிறுள், (சற்று எட்டிப் போய்) இன்பவல்லி, தேவியார் அழைக்கிறுர்கள், சீக்கி-ரம் வா. [இன்பவல்லி வருகிறுள்]

**இன்பவல்லி** — ஏன் அம்மணி?

**சுதேஷ்ணை** — இன்பவல்லி, இங்கே வா, நேற்று மாலை மலர்கொய்ய யாரார் போனீர்கள்?

**இன்பவல்லி** — கல்யாணி, விரதசாரணி, நான் மூன்று பேரும் போயிருந்தோம்.

**சுதேஷ்ணை** — போன பிறகு அங்கு என்ன நடந்தது?

**இன்பவல்லி** — என்ன நடந்தது — ஒன்றும் விசேஷ-மில்லையே.

**சுதேஷ்ணை** — ஒன்றும் நடக்க வில்லையா? போனதும் — மலர் கொய்ததும்—வந்ததுந்தான?

**கல்யாணி** — இல்லை—நாங்கள் மூவரும் நந்தவனத்தில் போனபிறகு, கொஞ்சநேரம் பாட்டுப் பாடினேம்; பிறகு மலர் பறிக்கப் பிரிந்துபோனேம்.

**சுதேஷ்ணை** — பிறகு ?

**கல்யாணி** — பிறகு இன்பவல்லிக்குத்தான் தெரியும்; இன்பவல்லி, என்ன நடந்தது சொல்லேo.

**இன்பவல்லி** — மலர் கொய்துகொண்டு இருந்தோம். அப்போது — தங்கள் சகோதரர் வந்தார்.

**சுதேஷ்ணை** — நடந்த சங்கதியைச் சொல்ல மயக்கம் என்ன? உனக்குத் தெரிந்தமட்டும் சொல்லு.

**கல்யாணி** — நீதானே என்னிடம் வந்து சொன்னை— சொல்லேo.

**இன்பவல்லி** — அம்மணி, வந்தார் — வந்து விரதசாரணியைக் காட்டி, 'இதுயார்? இவள் இன்னும் கன்னிகை தானே?' என்று கேட்டார். இவள் வண்ணமகள், வந்து ஒருவாரமாகிறது, மற்றவிஷயம் எனக்கு ஒன்றுந் தெரியாது என்று சொன்னேன்; 'சரிதான் போங்கள்' என்று சொன்னர்?

**சுதேஷ்ணை** — எங்கே போங்கள் என்று சொன்னர்? என்னடி கல்யாணி, என்ன சங்கதி?

**கல்யாணி** — நான் பிரிந்து போய் மலர் கொய்துகொண்டு இருந்தேன். சற்று நேரத்திற்கெல்லாம் இன்பவல்லி என்னிடம் வந்தாள். எங்கே அக்கா என்றுகேட்டேன். இல்லை, கீசகமகாராஜா அங்கே வந்தார், அவர் விரதசாரணியோடு ஏதோ பேசவேண்டுமாம், நம் இருவரையும் அரண்மனைக்-

குப் போகச் சொன்னார் என்றாள். சரிதான் என்று இருவரும் சேர்ந்து வந்துவிட்டோம், அம்மணி.

**சுதேஷ்ணை**—மூவரும் ஒன்றாகப் போனவர்கள் அவளை-மட்டுந் தனியாக விட்டு வந்துவிடலாமா?

**கல்யாணி** — அம்மா, அப்படியும் இன்பவல்லியைத் தடுத்துச் சொன்னேன்; அவள்தான், 'கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்' என்று என்னை இழுத்துக்கொண்டு வந்துவிட்டாள்.

**சுதேஷ்ணை** — ஏண்டி கல்யாணி —

**இன்பவல்லி** — இல்லை அம்மணீ, அவள் வண்ணமகள் என்று சொன்னேன், அதற்கு அவளைப் பார்த்-தால் வண்ணமகள்போல் காணவில்லையே என்று கேட்டார். அரசே, ஏதோ காலவித்தியாசத்தால் இங்கே வந்திருப்பதாகச் சொல்லியிருக்கிறாள் என்று சொன்னேன். 'சரிதான், அதில் ஏதோ அந்தரங்கம் இருக்கிறது, அதை நான் அறிந்து-கொள்ளவேண்டும்; நீங்கள் இருவரும் அவள் அறியாமல் அரண்மனைக்குப் போங்கள்' என்றார். அதன்மேல் இருவரும் வந்துவிட்டோம்.

**சுதேஷ்ணை**—(சற்று யோசித்து) சரிதான், இருக்கட்டும், போங்கள். கல்யாணி, நீ தாகத்திற்குக் கொண்டு-வா. இன்பவல்லி, நீ போய் என் தம்பியைக் கண்டு, நான் வருவதாகச்சொல். [போகிறார்கள்]

## மூன்றாங் களம்

**இடம்:** கீசகன் படுக்கையறை

**காலம்:** முற்பகல்

**பாத்திரங்கள்:** கீசகன், சுதேஷ்ணை, பாங்கன், விரதசாரணி

[கீசகன் தனது மஞ்சத்தின் மீது படுத்து வருந்துகிறான்; பாங்கன் விசிறுகிறான்]

**கீசகன்** — பாங்க, பஞ்சணையா இது, உறுத்துகிறதே — சேவகா, என்னைத் தூக்கு — ஆ ஐயோ, தலையைச் சுற்றுகிறதே — கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா — (சேவகன் தண்ணீர் கொண்டு வர) முட்டாள், தண்ணீர் என்றால் வெந்நீர் கொண்டு வந்தாயே.

**சேவகன்** — தண்ணீர்தான், அரசே.

**கீசகன்** — கண்டபடி பிதற்றாதே, ஓடிப் போ. பாங்க, எங்கே இருக்கிறாய் — எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. என் நிலை என்னாகுமோ — ஜாக்கிரதையாக இருங்கள். [சுதேஷ்ணை வருகிறாள்]

**சுதேஷ்ணை** — தம்பி, கீசகா —

**கீசகன்** — அக்கா —

**சுதேஷ்ணை** — கண்மணீ, என்ன உனக்கு? ஏன் நீ இப்படி வருந்துகிறாய்? எப்படி இருக்கிறது?

**கீசகன்** — எனக்கு — ஒன்றும் — இல்லை.

**சுதேஷ்ணை** — ஒன்றும் இல்லாவிட்டால் ஏன் இப்படி வருந்துகிறாய்! (பாங்கனைப் பார்த்து) பாங்கா, நமது வைத்தியர்கள் என்ன சொன்னார்கள்?

**பாங்கன்** — (மெதுவாக) அம்மணி, அவர்கள் தனித் தனி வந்து கை பார்த்தார்கள்; ஒருவருக்கும் ஒன்றும் தெரியவில்லை. பிறகு அவர்கள் ஒன்று கூடி யோசித்தார்கள்; அப்போதும் ஒன்றும் ஏற்படவில்லை, இது ஏதோ மனோ வியாதியாக இருக்கும் என்று பேசிக்கொண்டார்கள்.

**சுதேஷ்ணை** — அப்படியா — அப்பா கீசகா, உள்ளதை என்னிடம் சொல்ல லாகாதா — முன்பு கடிந்து பேசினேன் என்று வருத்தமா — அவள் ஓடி வந்த கோலத்தைக் கண்டால் யாருக்குத்தான் கோபம் வாராது.

**கீசகன்** — ஆம், அக்கா, நான் அறியாமல் அப்படிச் செய்துவிட்டேன். உத்தமியை உள்ளம் வருந்தப் பேசிவிட்டேன். அக்கா, என்னை மன்னிக்க வேண்டும்.

**சுதேஷ்ணை** — மன்னிப்பென்ன, நீ அதையெல்லாம் இப்போது நினைக்காதே. கண்மணீ, எப்படி-யாவது இந்த நோய் நீங்கி எழுந்தால் போதும்.

**கீசகன்** — எழுந்திருப்பதா — ஏது! அக்கா — வருந்தாதே — மாமாவுக்குந் தைரியஞ் சொல்லு — தம்பியரைப் பார்த்துக்கொள் — உத்தரைக்கும், உத்தரனுக்கும் தேறுதல் கூறு — ஐயோ, என்னை மன்னிக்கும்படி அந்த விரதசாரணிக்கும் —

**சுதேஷ்ணை** — (வருத்தத்துடன்) அப்பா, கண்மணீ, சுத்தவீரன் இப்படி மனம் உடையலாமா — ஏன் இப்படி எல்லாம் நினைக்கிறாய். (சேவகனைப்பார்த்து) சேவகா, விரதசாரணியைக் கொஞ்சம் பால் கொண்டு வரச் சொல்.

**கீசகன்** — (முகமலர்ச்சியுடன்) என்ன ?

**சுதேஷ்ணை** — (கீசகன் முகத்தை உற்று நோக்கின வண்ணமாக) விரதசாரணியைக் கொஞ்சம் பால் கொண்டு வரச் சொன்னேன்; பாலாவது கொஞ்சம் சாப்பிடு.

**கீசகன்**—ஐயோ! அவளுக்கு ஏன் அவ்வளவு கஷ்டம் ?

**சுதேஷ்ணை** — கஷ்ட மென்ன, அப்பா கீசகா, உன் வார்த்தையால் உன் கருத்து நன்கு வெளியாகிறது. அப்படி உனக்கு விருப்பமானால் உன் மனம்போல் விவாகம் செய்துகொள்ளலாமே.

**கீசகன்** — நான் மனங்கொண்டால் —

**சுதேஷ்ணை** — நீ மனங் கொண்டால் முடிவதற்கு என்ன தடை? எதில் குறைவென்று உன்னை வேண்டா என்று சொல்லப் போகிறாள்.

**கீசகன்** — மனமில்லாமலா — அன்று நான் அவ்வளவு வாதாடினேன் —

**சுதேஷ்ணை** — அன்று நீ வாதாடியதும் சரியல்ல, அவள் மறுத்ததும் குற்றமல்ல. 'வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்' என்பது உனக்குத் தெரியாதா.

**கீசகன்** — அக்கா, வேண்டா, அதெல்லாம் வீண் எண்ணம், வீண் முயற்சி. அவளைச் சாதாரண-மாக நினைத்துவிடாதே. அவளைப் பார்க்கும்-போதே அவள் நல்ல பதவியில் இருந்தவள் என்-பது விளங்கவில்லையா. யாராக இருந்தால் என்ன, ஒவ்வொருவருக்கும் மனோபாவம் இல்லையா — ஒவ்வொருவருக்கும் யதேச்சை இல்லையா. மனத்தை மாற்ற யாராலாகும். இவ்விஷயத்தில் பெண் மனம் பிடிவாதமுள்ளது. அவ்வித உறுதி-யைக் கொண்ட பெண்களுக்கு, தாம் கருதிய கணவன் தவிர, மற்றவர் மன்னரானாலும் லக்ஷ்ய-மில்லை. 'புல்லானாலும் புருஷன், கல்லானாலும் கணவன்' என்பது இப்படிப்பட்ட உத்தமிகளால் உண்டான பழமொழி யல்லவோ — வேண்டா, வேண்டா — ஐயோ! வீணாக வற்புறுத்தினேன் — பழிக்கும், பாவத்திற்கும் ஆளானேன் — அக்கா, இனி, என்னை மறந்துவிடு.

**சுதேஷ்ணை** — அப்பா, கண்மணி, இன்னும் அப்படிச் சொல்லாதே; உன் கருத்தை உணர்ந்தேன், இனி அதற்குத் தக்க பரிகாரம் தேடுகிறேன். (பாங்கனைப் பார்த்து) பாங்கா, தம்பியைப் பார்த்துக் கொள்; பத்திரம், நான் வருகிறேன்.

 [எழுந்து போகிறாள்]

## நான்காங் களம்

இடம் : அந்தப்புரம்.

காலம் : முற்பகல்.

பாத்திரங்கள் : சுதேஷ்ணை, விரதசாரணி.

[விரதசாரணி பால் எடுத்துக்கொண்டு வருகிருள் ; சுதேஷ்ணை அவளை வழியில் சந்திக்கிருள்.]

**விரதசாரணி** — அம்மணி, கொஞ்சம் பால் கொண்டு-வரச் சொன்னீர்களாமே.

**சுதேஷ்ணை**—ஆமாம், நீ இதைக் கொண்டுபோய் என் தம்பிக்குக் கொடுத்துவிட்டு வா.

**விரதசாரணி** — அம்மா, யாருக்கு ?

**சுதேஷ்ணை** — என் தம்பி கீசகனுக்கு.

**விரதசாரணி** — அம்மா ! — அம்மா !

**சுதேஷ்ணை** — நீ யோசிப்பது எனக்கு நன்கு தெரி-கிறது; தெரிந்துதான் சொல்லுகிறேன். இதனால் உனக்கு ஒன்றும் தீங்கு நேரிடாது. நான் சொல்-வதைக் கேள். இதைக் கொண்டுபோய் அவ-னிடம் கொடுத்துவிட்டு வா — போ சீக்கிரம்.

**விரதசாரணி** — உங்களுக்குத் தெரியாத விஷயம் நான் என்ன சொல்லப் போகிறேன். இட்ட வேலை-யைச்செய்யச் சித்தமாக இருக்கிறேன். ஆனால், இந்த விஷயத்தில் மாத்திரம் —

**சுதேஷ்ணை** — என் தம்பி வியாதியால் வருந்துகிறான். வைத்தியரும் கைவிட்டார்கள். இந்த நிலையில் அவன் உன் இஷ்டத்துக்கு விரோதமாக ஒரு தீங்கும் செய்யமுடியாது—இதில் ஒன்றும் தவறு இல்லை, சீக்கிரம் போ —

**விரதசாரணி** — தாங்கள் இப்படிக் கட்டளையிட்டால், நான் என்ன செய்வேன்!

**சுதேஷ்ணை** — விரதசாரணி, என் சொல்லைக் கேள்.

தன்யாசி] **பல்லவி** [சாப்பு

இந்தவேளை என்றன் சொல்லை - நீ மறுக்காதே
என்னுயிராம் வண்ணமாதே . (இந்த)

**அநுபல்லவி**

புந்தியில் என்றன் தம்பிக்குப் புகழ் பாலை நீகொண்டு
போய் தந்தால்தான் எமக்குப் புவிமிசை வாழ்வுண்டு
(இந்த)

**சரணங்கள்**

தீமையாலவன் மாண்டால் ஜெகத்தினிலெங்கள் சீரும்
செல்வமும் செங்கோலும் திகந்தமுலவும் பேரும்
போமப்பாலெம்மையோர் பொருட்டாய் மதியார்யாரும்
பூவிற்ற கடைதனில் புல்விற்க வந்துநேரும்
(இந்த)

அவனியில் உன்தெய்வக் கற்பே உனக்குவேலி
யாயிருக்க அதற்கே தழிவு புண்ணியசாலி
இவனுலிவ் வூரிலிந்த மட்டும் பகைவர்சோலி
இல்லாததால் கழுத்தில் இருக்கு திந்தத்தாலி
(இந்த)

**விரதசாரணி** — அம்மணி, தங்கள் கட்டளையை நான் மறுக்கிறேன் என்று என்ன வேண்டா —

**சுதேஷ்ணை** — நான் இவ்வளவு வேண்டியும் உனக்கு மதிப்பில்லாமல் போயிற்று. ஒவ்வொருவரும் தம் தம் நிலையைக் கவனிக்க வேண்டும். இது என் கட்டளை, சீக்கிரம் எடுத்துக்கொண்டு போ.

**விரதசாரணி** — அம்மணீ, கோபிக்க வேண்டா, தங்கள் கட்டளையை மறுக்கவில்லை. என் நிலையைத் தங்க-ளிடம் வெளியிட்டுக் கொண்டேன். மற்றென்று-மில்லை, கோபிக்கவேண்டா, அம்மணீ.

**சுதேஷ்ணை** — விரதசாரணி, வருந்தாதே. உனக்கு ஏதும் தீங்கு நேரிடாது. அப்படி நேர்ந்தால் என் உயிரைக் கொடுக்கிறேன். நான் சொன்னது போல் செய். சீக்கிரம் பாலைக் கொண்டுபோ.

**விரதசாரணி** — கொண்டு போகிறேன்.

[விசனத்துடன் போகிறுள்]

# ஐந்தாங் களம்

**இடம் :** கீசகன் அறைக்குப் போகும் வழி.

**காலம் :** மூற்பகல்.

**பாத்திரங்கள் :** விரதசாரணி, பிருகந்நளை.

**விரதசாரணி** — ஐயோ, விதியே! இதைவிடக் கொடிய நிலைமையும் உண்டா! தெய்வமே, இதுவும் உன் திருவருளா!

விருத்தம்

திடமுடன எம்ம தென்றே
செல்வமாக் கொண்ட நந்தம்
உடலினை யன்றி அந்தோ
உளத்தையும் அறவே விற்று
அடிமைபிணை மாகி யிந்த
நானிலத் தொரு வருக்கு
அடிமையாப் பட்டோர் வாழ்க்கை
அல்லலே அல்ல லம்மா!

என்ன செய்வது, அடிமைப்பட்ட பின்பு இட்ட கட்டளையைச் செய்யத்தானே வேண்டும். எங்கும் நிறைந்த இறைவனே, நீயே துணை.

[சூரியனைப் பார்த்து]

அகவல்

ஜகத்தினி லுள்ள சராசரம் யாவும்
உவப்புடன் ஓங்கி உயர்நிலை யடைய
பல்லா யிரங்கதிர் பரப்பி எங்கெங்கும்
ஒல்லும் வகையால் உள்ளுறக் கண்டு
வெப்பந் தனக்கும் விளங்கொளி தனக்கும்
கப்பிய நீர்தரு கார்மழை தனக்கும்
காரண மாகிக் கண்ணுறு கடவுளாம்
சூரிய னென்னும் தூயவா னவனே
அலைகடல் துரும்பென அலையும் எனக்கு
நிலைபட நின்னருள் நேர்ந்திட வேண்டும்.

என்ன வரினும் வரட்டும்; அவன்தான் நம்மை என்ன செய்யக் கூடும்.

[பிருகந்நளை வந்து விரதசாரணியைத் தனியே சந்திக்கிறாள்]

**பிருகந்நளை** — கண்மணீ, ஏன் வருத்தத்துடன் போகிறாய்? காலத்திற்கு ஏற்றபடி நடந்து கொள்ள வேண்டாவோ — இதெல்லாம் நாம் முன்னமே எதிர் பார்த்ததுதானே — இப்போது வருந்தி என்ன பலன்?

**விரதசாரணி** — காலத்திற்கு அஞ்சியா வருந்துகிறேன், அந்தத் துஷ்டன் காரியத்திற்கு அஞ்சியன்றோ வருந்துகிறேன். வெளியிட்டால் வீண் பழி நேரும் என்று அடங்கியிருந்தேன்.

**பிருகந்நளை** — துஷ்டனா — யாரவன்?

**விரதசாரணி** — ஐயோ, என்னவென்று அதைச் சொல்லுவேன்! என் உள்ளம் நடுங்குகிறதே.

**பிருகந்நளை** — கண்மணி, கலங்காதே; விஷயத்தை வெளியிடு, யோசித்துத் தக்கது செய்யலாம்.

**விரதசாரணி** — ஒரு நாள் நானும் பாங்கியரும் மலர் பறித்துக்கொண்டு இருந்தோம். கீசகன்—சுதே-ஷ்ணை தம்பி, என்னோடு ஏதேதோ பேச வந்தான். பெண்களோடு இவ்வாறு பேசுவது ஏற்றதல்ல என்று சொல்லி வந்து விட்டேன்; பின்னை தொடர்ந்து வந்தான்.

**பிருகந்நளை** — யார் — கீசகனா — பிறகு?

**விரதசாரணி** — பிறகு சுதேஷ்ணை அவனைக் கண்டித்து அனுப்பினாள்; அதோடு அந்தத் துன்பம் ஒழிந்ததென்று இருந்தேன் —

**பிருகந்நளை** — ஆனால் இன்னும் அவன் உன்னைத் துன்புறுத்துகிறானோ?

**விரதசாரணி** — ஆம், சுதேஷ்ணை அவ்வளவு கண்டித்-தும் அந்தப் பாவி அடங்குவதாகக் காணவில்லை. இன்று ஏதோ வியாதியால் வருந்துகிறானாம், அவனுக்குப் பால் கொண்டுபோய் கொடுக்கும்படி கட்டளையிட்டாள்.

**பிருகந்நளை** — யார்? சுதேஷ்ணையா?

**விரதசாரணி** — ஆம், நான் தடுத்தும் உரைத்தேன், அவள் கோபங் கொண்டு, 'நீ அஞ்ச வேண்டா;

உன் கருத்துக்கு விரோதமாக ஒன்றும் நேரிடாது; நான் சொன்னபடி செய்' என்று உரத்துச்சொன்ஞள்; என்ன செய்வேன், என் விதியை வெறுத்துக்கொண்டே வருகிறேன்!

**பிருகந்நளை** — கண்மணீ, வருந்தாதே, நமது நிலைமை இப்படி இருக்கிறது; இதையெல்லாம் நினைத்துத்தானே முனிவர் அப்படிச் சொன்ஞர். அதை நாம் கவனிக்க வேண்டும். எல்லாம் ஒருவாறு நன்ருக அமைந்தும், இது ஏதோ ஓர் இடையூறு குறுக்கிட்டது. ஆயினும் குற்றமில்லை. நீ போ, உனக்கு ஒன்றும் நேராது. அப்படி ஏதேனும் நேர்ந்தால், என் கையில் காண்டீபம் இருக்கிறது, வசிக்கக் காடு இருக்கிறது. அஞ்சாதே, வருவது வரட்டும்; நாமும் கூடியவரையில் பொறுப்போம்.

**விரதசாரணி** — போகிறேன், இல்லாவிட்டால் எல்லாம் என்னுலேயே கெட்டதாக முடியும்; போய் வருகிறேன்.

[பிரிந்து போகின்றனர்]



## ஆறாங் களம்

**இடம் :** கீசகன் அறை.
**காலம் :** முற்பகல்.
**பாத்திரங்கள் :** கீசகன், விரதசாரணி.

[விரதசாரணி பாலை யெடுத்துக்கொண்டு படுக்கை யறைக்குள் போய் கீசகன் பக்கத்தில் அதை வைத்து விட்டுத் திரும்புகிருள்]

**கீசகன்** — பெண்மணீ, சற்று நில், என் விண்ணப்பத்தைக் கேள். (**விரதசாரணி ஒருபுறம் ஒதுங்கி நிற்கிருள்**) ஐயோ, மதிமயங்கிச் செய்த காரியத்தின் பொருட்டு மன்னிக்கவேண்டும். என் மனமே என்னை வருத்துகிறது ; நான் எண்ணுமல் இயற்றிய காரியமே என்னை இந்தக் கதிக்குக் கொண்டுவந்தது. பெண்மணீ, நீ மனமிரங்கி, 'மன்னித்தேன்' என்று ஒரு வார்த்தை சொன்னுல், நான் நல்ல மரணம் அடைவேன். உன் உத்தம குணங்களைச் சிறிதும் அறியாதொழிந்தேன். ஐயோ, நீ வாய் திறந்து ஒரு வார்த்தை வழங்கலாகாதா ; என் நிலையைக் கண்டும் உனக்கு இரக்கம் பிறக்கவில்லையா —

**விரதசாரணி** — அப்படியே, விடைகொடும்.

**கீசகன்** — பெண்மணீ, உன் மனப்பூர்வமாக என்னை மன்னித்ததாக ஒரு சொல் சொல்லு; பிறகு உன் இஷ்டம்போல் போகலாம்.

**விரதசாரணி** — அடிமையா அரசரை மன்னிப்பது! அது எனக்குத் தகாது. சென்ற விஷயத்தைச் சிந்திப்பதில் பயனென்ன; அதன் பொருட்டுத் தாம் ஏன் வருந்தவேண்டும்.

**கீசகன்** — ஏன் வருந்தவேண்டும் என்று கேட்கிருய், அந்தச் சொல் அம்புபோல் பாய்கிறதே! என் குற்றமே என்னைக் குத்துகிறது — ஒரு சொல் சொல்லலாகாதா! என்னை மன்னித்தாயா?

**விரதசாரணி** — ஆமாம்.

**கீசகன்** — மனப்பூர்வமாக மன்னித்தாயா?

**விரதசாரணி** — மனப்பூர்வமாகத்தான்.

**கீசகன்** — இனி உன் இஷ்டம், போகலாம் — (விரதசாரணி ஓர் அடி எடுத்து வைக்கிருள்) பெண்மணீ, ஒரு வார்த்தை — (விரதசாரணி நிற்கிருள்) நான் ஏதோ உனக்கு அபசாரம் செய்துவிட்டேன். ஆனல், என் மனமாரச்செய்தேனென்று நினைத்து விட்டாயோ — இல்லை, இல்லை. அதைச் சொல்லி என்ன பயன் — நான் என்ன சொன்னலும் உனக்கு உண்மை தோன்ருது.

**விரதசாரணி** — அரசே, அதெல்லாம் ஒன்றுமில்லை; நான் போகிறேன்.

**கீசகன்** — பெண்மணி, நான் செய்த குற்றத்தைச் சீர்தூக்கிப் பார். ஐயோ, என் மனம் என்னையும் அறியாமலே உன்னிடத்தில் சென்றுவிட்டது; அதை மீட்டுக்கொள்ள என்னால் கூடவில்லையே! என் மனம் செல்லக்கூடாத இடத்தில் சென்றதே! பெண்மணி, என்னையும் அறியாமல் நேர்ந்த குற்றத்திற்கு உன்னையும் துன்புறுத்தி, நானும் இப்படி வருந்துவது தருமமோ—என்ன நியாயம்! என்ன தருமம்! இதுவும் வினையாகுமா —

**விரதசாரணி** — அரசே, கொட்டிக் கொட்டி அளந்தாலும் குறுணி பதக்காகப் போவதில்லை. தாம் சொல்வதையே சற்று யோசித்துப் பாரும்; தாம் செய்தது தகாத காரியமென்று உணர்ந்து, உத்தம குணத்தால் வருந்துகிறீர்; இது உண்மையானால், அதை மறுபடியும் நாடாதிருப்பதன்றோ நலம். அறிந்தும் குற்றம் செய்வார் உண்டோ— வேண்டா, எனக்கு மேலும் மேலும் துன்பத்தை விளைக்கிறீர். உத்தமராகிய உமக்கு இது உசிதமாகுமா—அமைந்திரும், நான் போகவேண்டும்.

**கீசகன்** — பெண்மணி, இன்னும் ஒரே சொல்; ஐயோ உனக்குத் தெரியவில்லையே! நான் ஆசைக்கு அடிமைப்பட்டவன்தான். அதிலிருந்து மீளவேண்டுவதும் அவசியந்தான். ஆயினும், எவ்வளவு முயன்றேன், முடியவில்லையே! நீ இந்த அறையில் அடி வைக்குமுன், என் உயிர் உடலில் இருக்கிறதோ, இல்லையோ என்று சொல்லும்படி யிருந்தது; நீ வந்ததும் உயிரும் வந்தது. எழுந்தேன், இருந்-

தேன், பார்த்தேன், பேசினேன். உன்னைக் காணக் காண இவ்வுலகம் முழுவதையும் ஒரு நொடியில் வென்றுவிடலாம்போல் தோன்றுகிறதே. பெண்மணி! இவ்வாறு என் மனத்தைக் கொள்ளைகொண்டு, அதைக் கொலை செய்தல் நீதியோ — என்னினும் உனக்கு ஏற்றவன் யார்? கீசகன் என்று கேள்விப்பட்டதில்லையா நீ? இவ்வுலகில் எனக்கு அஞ்சாத வீரரும் உண்டோ! ஐயோ, அகாலத்தில் அநியாய மரணத்திற்கு என்னை ஆளாக்கி விடாதே! பெண்களுக்கு இளகிய மனம் என்கிறார்களே; அது உன்னிடத்தில் இல்லையே. உன்னால் என் உயிர் போய்விடும்!

**விரதசாரணி** — அரசே, நானோ அபலை, அநாதை, அதிலும் அடிமை. 'மறுத்தால், இறக்கிறேன்' என்கிறீர். நான் உமது கருத்துக்கு உடன்பட்டால், என் உயிரினும் சிறந்த ஒழுக்கம் இறந்துவிடுமே! ஐயோ,

அகவல்

பெண்ணென உலகில் பிறத்தலே தீது
நண்ணும் அதனினும் நற்றுணை யற்றுத்
தன்வச மின்றித் தங்கி யிருத்தல்
பின்னுந் தீதெனப் பேசிட லாமே
எனினும்
மனநிலை ஒன்றும் மங்கையர்க் கிருப்பின்
இனமுறு மடவார் ஏற்றம் பெறுவர்
அதனால்
கற்பே நல்லுடை கற்பே நல்லணி

கற்பே அழகு கற்பே அரும்பொருள்
கற்பே நன்மலர் கற்பே கல்வை
கற்பே காவல் கற்பே நலமெலாம்
என்னும் உறுதியை இதயத் திருத்தி
மன்னுதம் நிலையில் வழுவா திருப்பின்
அவரையே இந்த அவனியில் உள்ளோர்
தவமெனக் கொண்டு தாழ்ந்திடு வாரோ.

ஆதலால், அரசே, பெண்கள் தம் கற்பைப் பெரிதும் போற்றுதல்வேண்டும். ஆடவரும் அவ்வாறே புருஷோத்தமராக இருப்பது அவசியம். அடிமை யென்று என்னை அலக்ஷியமாக எண்ணுமல், தமது பதவிக்கும் பண்புக்கும் ஏற்றவாறு நடந்துகொள்ளும்; நான் போய் வருகிறேன்.

**ஜீசகன்** — ஐயோ, பெண்மணீ, உன்னை அடிமை என்று நினைக்கிறேன் — உன்னை அடிமை என்று நினைத்தால் என் உள்ளத்தை உனக்கு அடிமை யாக்குவேனு — அடிமையாக்கினுலும், அது இழிவென்று நினைக்கிறேனு, இல்லையே—இந்த அடிமையை நீ ஆதரிக்க மனமிரங்கலாகாதா ?

**விரதசாரணி** — நான் அடிமை யென்னும் எண்ணம் தமக்கு இல்லையாயின், நான் கூறுவதைச் சற்று உள்ளத்திற் கொள்ளவேண்டும். பெரியோர் சிறியோர், உயர்ந்தோர் தாழ்ந்தோர் யாவராயினும் அவரவர்க்குத் தக்கவாறு யதேச்சை என்பது உண்டு. ஒருவருக்கு விருப்பானது மற்றவருக்கு வெறுப்பான தாகும். உலகம் பலவிதம் என்பர். எல்லோரும் ஒன்றையே விரும்புவதும் அரிது ;

அவரவர் தாம் தாம் விரும்பியதையே அடைவதும் அரிது. தாம் விரும்பியவாறே எதையும் அடைவதானல் உலகத்தில் சுக துக்கங்கள், நன்மை தீமைகள் என்னும் பேதமே ஏற்பட்டிராது. ஆதலால், எவரும் தம் நிலைமைக்குத் தக்கவாறு நல்ல செயலையே நாடவேண்டும்; நல்வினை யிருந்து அது கிடைத்தால் அனுபவிக்க வேண்டும்; கிடைக்காவிட்டால் அதை முற்றும் மறத்தல் வேண்டும். விடாமுயற்சி என்பது நற்செயலுக்கு ஏற்குமே யன்றி, தீச் செயலுக்கு ஏற்காது.

**கீசகன்** — கிட்டாத பொருளையா விரும்பினேன்; நீ என்ன சொல்லியும் என் மனம் கேட்க வில்லை; ஒரு நிலையில் நிற்கவில்லை. என்ன செய்வேன்! (**விரதசாரணியை அணுகி**) பெண்மணி, முறைப்படி என்னை மணஞ் செய்துகொள்வதில் என்ன தடை?

**விரதசாரணி** — மணஞ் செய்துகொள்வதா —

**கீசகன்** — ஆம், பழிபாவங்கள் சிறிதும் நேராவண்ணம் முறைப்படி மணஞ் செய்துகொள்கிறேன். இன்னும் என்ன தடை? (**கையைப் பிடிக்கப் போகிறான்**)

**விரதசாரணி** — என்னைத் தொடாதீர்; தூர நில்லும்; நான் கன்னிகையல்ல.

**கீசகன்** — இனிப் பொய்சொன்னாலும் விடமாட்டேன் என்ன வரினும் வரட்டும் (**தொடர்ந்து ஓடுகிறான்**)

**விரதசாரணி** — (**ஓடிக்கொண்டே**) ஐயோ, ஐயோ, இதைக் கேட்பவர் இங்கே இல்லையா —

# ஏழாங் களம்

**இடம் :** விராடன் சபா மண்டபம்.

**காலம் :** முற்பகல்.

**பாத்திரங்கள் :** விராடன், கங்கபட்டர், மந்திரி, பலாயனன், வாசவன், விரத-சாரணி, கீசகன்.

[வாசவன் தன் சிஷ்யருடன் வருகிறான்]

**வாசவன்** — ராஜ பூஜித ராஜ மார்த்தாண்ட ராஜ ராஜேந்திரா பராக்.

**மந்திரி** — நல்லது, நீ யார்? எங்கு வந்தாய்?

**வாசவன்** — ராஜேந்திரா, அடியேன் மஹா வீரன்; என் பெயர் வாசவன்.

**விராடன்** — ஓஹோ — வாசவனா, என்ன சங்கதி?

**வாசவன்** — அரசே, நான்,

சந்த விருத்தம்

மண்டல மெண்டிசை யும்புகழ் தங்கிடு
மன்னர்கள் தம் சபையில்
அண்டி யிருந்தமு துண்டு வளர்ந்திடும்
அங்கண ராம் அசடத்

திண்டிறல் தங்கிடு மல்லரை வென்று
    தினந்தின மும்விருதே
கொண்டிடும் வாசவன் நின்சமு கந்தனில்
    கொண்டிட வந்தனனே.

**வீராடன்** — அப்படியா, உனது வன்மையைப் பார்ப்போம். மந்திரி, நமது மல்லர்களைத் தனித்தனி வந்து இவனோடு யுத்தம் செய்யச் சொல்லும்.

[மல்லர் வருகின்றனர்]

**வாசவன்** — சரி, தனித்தனியே வாருங்கள், வந்து நமது கை வரிசையைப் பாருங்கள்.

**முதல் மல்லன்** — இதோ பார்க்கிறேன், உன் வாய் மதத்தைத் தீர்க்கிறேன்.

[சண்டை செய்து மல்லன் விழுந்து விடுகிறான்]

**வாசவன்** — இன்னும் யார்? வா சீக்கிரம்.

**இரண்டாம் மல்லன்** — அவனை வென்றுவிட்டோம் என்று அகங்காரங்கொள்ளாதே; நில், பார்ப்போம்.

**வாசவன்** — இதோ வந்தேன்; அவனுக்கு இரண்டு கை, உனக்கு ஒரே கை; இந்தக் கையை மடக்கிவிடு, பார்ப்போம்.

**இரண்டாம் மல்லன்** — அப்படியா — இதோ பார்.

[மடக்குகிறான், முடியவில்லை]

**வாசவன்** — சரி, தீர்ந்தது, ஓடிப்போ; இன்னும் யாராவது உண்டா?

**மூன்றாம் மல்லன்** — அவசரப்படாதே, நில், இதோ வருகிறேன்.

**வாசவன்** — ஆஹா வரலாம், அவனுக்கு ஒரு கை உனக்கு ஒரே விரல். இந்த விரலால் தட்டுகிறேன். அதை நீ பொறுத்துக்கொள், பார்ப்போம்.

**மூன்றும் மல்லன்** — பொறுத்துக்கொண்டால்?

**வாசவன்** — நான் தோற்றவனே.

**மூன்றும் மல்லன்** — சரி, ஆனல் ஆகட்டும்.

[வாசவன் தட்டுகிருன் - மூன்றும் மல்லன் துடித்து விழுகிருன்]

**விராடன்** — மந்திரீ, ஏது, இந்த மூவருமே ஒன்றும் இல்லாமல் ஒதியமரம் ஆனுர்கள். மற்றவர்கள் வந்து பயன் என்ன; வேண்டா, நிறுத்தி வாசவனுக்குப் பரிசளித்து அனுப்பிவிடலாம்.

[மந்திரி யோசிக்கிருன்]

**கங்கபட்டர்** — அரசே, வாசவன் வலிவுள்ளவனுகவே காண்கிருன். ஆயினும், நமது பலாயனன் மல் யுத்தத்தில் வல்லவன் என்றுனே, அவனை விட்டுப் பார்க்கலாமே.

**விராடன்** — ஆமாம், அவனே தக்கவன்—பார்ப்போம்; மந்திரீ, நமது பலாயனனை வரவழையும்.

**பலாயனன்** — (ஓடிவந்து) ஆண்டவரே, அடியேன் இதோ காத்திருக்கிறேன்.

**விராடன்** — ஓஹோ, நீயும் எங்கே சமயம் என்று நான் காத்திருந்தாயோ — நல்லது, பலாயனு, இந்த வாசவனோடு மல்யுத்தம் செய்வாயோ?

**பலாயனன்** — ஆண்டவரே, இதோ ஒரு நொடி, (தொடை தட்டிப் பாய்ந்து) ஏ வாசவா, வந்து நில்!

**வாசவன்** — ஓஹோ, உனக்கும் கொஞ்சம் உடம்பு ஊறுகிறதோ! துள்ளாதே, மெள்ள வா.

**பலாயனன்** — முதலில் என்ன வரிசை காட்டப் போகிருய்?

**வாசவன்** — வாசவனையா வரிசை கேட்கிருய்! நல்லது, குத்துவரிசை காட்டுகிறேன்.

**பலாயனன்** — குத்துவரிசையா, நீ பத்துக் குத்துக் குத்து, நான் ஒரு குத்துக் குத்துகிறேன்.

**வாசவன்** — பத்துக்கு ஒன்று —

**பலாயனன்** — நமது பேரைக் கவனி, நமது பெயர் பலாயனன்.

**வாசவன்** — அப்படியா, சரி, தாங்கிக்கொள்.

[வாசவன் குத்துகிருன், பலாயனன்

**பலாயனன்** — அப்பா, திமிர் கொஞ்சம் வாங்கிற்று! கொஞ்சம் கைகாரன் தான். சரி, நம்முடைய குத்தை வாங்கிக்கொள். நீ சொல்லாமலே குத்திஞய்; நான்சொல்லிக் குத்துகிறேன். சாமர்த்தியம் இருந்தால் தடுத்துக்கொள். பார், குத்து மார்பில் வருகிறது.

[வாசவன் துடித்துச் சாய்ந்து விழுந்து, உடனே எழுந்து]

**வாசவன்** — அடே, நான் யோசித்துத் தடுப்பதற்குள் குத்திவிட்டாய். கூடாது வா, மல்யுத்தம் செய்வோம். என்னைப் புரட்டிவிடு பார்க்கலாம்.

**பலாயனன்** — சரி, படி, பார்க்கலாம் ஒருகை.

[வாசவன் படிக்கிறான்; பலாயனன் கஷ்டப்பட்டுப் புரட்டித் தள்ளுகிறான்]

**வாசவன்**—அண்ணா, நமஸ்காரம், விருதுக்கு வேட்டையாடினேன். ஒரு குத்துக்கே உயிரைக் கையில் பிடித்துக் கொண்டேன். இனி இந்த விருது எனக்குத் தகாது; நீ எடுத்துக்கொள். அடே பிள்ளைகளே, வந்து அண்ணாவைச் சேவித்துக் கொள்ளுங்கள்; இனி இவரே நமக்குக் குரு.

[அரசன் முதலாயினோர் வயிறும் புண்பட நகைக்கின்றனர்]

**விராடன்** — பலாயனா, நீயே மல்லன், நீயே வீரன். இதோ இந்தப் பரிசுகளைப் பெற்றுக்கொள். இனி நீ நமது மல்லர்களுக்குத் தலைவனாக இரு.

[பலாயனன் வணங்கிப் பரிசு பெற்றுக் கொள்ளுகிறான். கீசகன் துரத்திக் கொண்டு வர, விரதசாரணி ஓடி வந்து சபையில் விழுந்து]

**விரதசாரணி** — (பாட்டு)

ஐயோ இந்தப் பாதகனை அடக்குவா ரிலையோ
செய்யாவினை செய்தவனைத் தெண்டிப்பா ரிலையோ!

**விராடன்** — ஆ, ஆ, ஆ, என்ன அநியாயம்.

[அனைவரும் திகைத்து நிற்கின்றனர்; விரதசாரணி எழுந்து அரசனைப் பார்த்து]

**விரதசாரணி —**

பைரவி] **பல்லவி** [ஆதி

என்னென்று கேட்க ஒரு திக்கில்லையா—விராட
மன்னனே இது செங்கோல் நிலையா.

**அநுபல்லவி**

மன்னும் என் மானத்தைப் பின்னம்செய்ய நேரிலே
வந்தானை ஐயையோ இந்தப் பாழும் ஊரிலே

**சரணம்**

விதிவிலக்குகள் போச்சுதா - வெள்ளரிக்காய்
விற்ற பட்டணம் ஆச்சுதா - ஐயோ இந்தச்
சதிகாரப் பாவி பர தாரமெனும் பேதத்தைச்
சற்றும் நினையாமல் மதத்தால் செய் அநீதத்தை

மன்னுவுன காபப வாசம - தனிலிருக்க
வந்த தறிந்து மோசம் - நினைந்து பாவி
இன்றினியார்களென் றெண்ணுமலே வந்தும்
என்னைத் துரத்திவந்த தித்தனைபேர்பார்த்திருந்தும்
(என்னென்று)

**விராடன்** — என்ன அநியாயம்! பட்டர் பெரும!
இவ்விதமான மதிகேடரும் உலகில் உண்டோ!

**கங்கபட்டர்** — அரசே, தீர விசாரித்துத் தக்கது செய்வோம்; விரதசாரணி, வருந்தாதே.

**பலாயனன்** — (உக்கிரத்துடன்) ஆ, என்ன அனியாயம்!

[அருகிலிருந்த மரத்தைப்
பிடுங்கப் போகிறான்]

**தங்கபட்டர்** — பலாயனு, இந்தப் பச்சை மரம் நிழல் கொடுத்துக்கொண்டிருக்கிறது. அது விறகுக்கு உதவாது; காட்டில் உலர்ந்திருக்கும் விறகைத் தேடிக்கொள், போ.

[பலாயனன் போகிறுன்]

**விராடன்** — அம்மா, அழாதே, என்ன நேர்ந்தது?

**விரதசாரணி** — ஐயோ, என்ன செய்வேன்!

அகவல்

அய்யகேள் அந்த வெய்யவன் செய்த
அனியா யத்தைத் தணிவுடன் சொல்லுவென்
அங்கம் பதைக்கிற தெங்ஙனம் புகல்வேன்

**விராடன்** — வருந்தாமல் சொல், விசாரிக்கலாம்.

**விரதசாரணி** —

அலர்கொய் திடவே மலர்வனந் தன்னை
அடைந்தே யங்கு மிடைந்த மலர்களை
அமைவுடன் பறிக்கும் சமயந் தன்னில்
அந்தக் கீசகன் வந்தே யென்றன்
அருகினில் நின்று பெருகிய மயலால்
அன்னமே குயிலே என்னையா தரியென
அறைந்தனன் யானும் கரைந்த மனத்துடன்
அரிய நீதிகள் தெரிய வுரைத்தேன்
அடங்கா தென்னைத் தொடர்ந்தான் யானும்
அரசியை யணுகிப் பரவினேன் யாவும்
அம்மையாம் அவளும் செம்மையாத் தேற்றினள்
அங்கும் கீசகன் பொங்கியே வந்தான்.

**விராடன்** — அங்கும் வந்தானு, அடா துஷ்டா! பிறகு?

**விரதசாரணி** —

அவனைக் கண்டித் திவண்வரேல் என்று
அதட்டிச் சொன்ன விதத்தால் என்னை
அகன்றே சென்றபின் மிகவருந் தினளும்.

**விராடன்** — கேடு காலம் கிட்டிக்கொண்டதோ !

**விரதசாரணி** —

அதையுணர்ந் தரசி இதமுடன் என்னை
அழைத்துப் பாலினைத் தழைத்த மனத்துடன்
கொண்டு கொடுவென விண்டனள் எனக்கே

**விராடன்** — சுதேஷ்ணையா சொன்னாள் ! — என்ன அனியாயம் ! பழி வந்தாலும் இப்படி யன்றோ வர வேண்டும் ! பிறகு ?

**விரதசாரணி** —

அவ்வித மேயான் ஒவ்வி யெடுத்தவன்
அறையிற் செலஅவன் விரைவுடன் எழுந்து
அன்புடன் வந்து துன்புறப் பேசி
அந்தோ என்னைச் சொந்தமாப் பற்றி
அடர்ந்த மயலால் தொடர்ந்தே வந்தனன்
அண்ணலே சமுகம் நண்ணியே வந்தேன்
அனைத்தையும் என்னை நினைந்து கருணையால்
அபயங் கொடுத்துச் சுபமுற அருளே.

**விராடன்** — அம்மா, வருந்தாதே, அவனுக்கு அழிவுக் காலம் நெருங்கியதால் இவ்வாறு செய்தான். கெடுமதி கண்ணுக்குத் தோற்றாது ; இருக்கட்டும், விசாரிப்போம். நீ உடனே அந்தப்புரத்திற்குப் போ. (கங்கபட்டரை நோக்கி) பட்டர்

கீசகன்

பெரும, இந்தப் பழிக்கு என்ன செய்வது;
இவனைத் தண்டியாமல் விடுவதும் தகுதியோ!

அகவல்

இருளற நோக்கின் இந்த நீதித்தலம்
அருள்விளங் கிடுமோர் ஆலய மாகும்
இதன்கண் நீதியை இயற்றுந் தகைமையர்
மதிமிகும் சிறப்பின் மானிட ராயினும்
அருவுரு வான ஆதியங் கடவுள்
கரந்தனிற் கொண்ட கருவியே யனையார்
சத்தியம் விளங்கச் சார்ந்தவர்க் குறுதியை
நித்தியம் புகலும் நியாயா திபர்கள்
வஞ்சகம் ஓரம் மனத்திற் கொண்டு
விஞ்சுமக் கோயிலில் வெய்துறப் புகுதலும்
பொருள்பெறல் முதலாம் புன்மைச் செயலொடு
அருளா லயத்தை அசுத்தப் படுத்தலும்
செய்யின் அப்பதகர்தம் தேயத் திற்கும்
மெய்யுரு வான விமலன் றனக்கும்
துரோகிய ராகச் சொல்லப் படுவரே
வரோதய அன்றியும் மன்னவன் செலுத்தும்
ஆண்மை யவன்றன் ஆண்மையே யன்று
காணகில் லாத கடவுள்தன் ஆணையே.
என்று பெரியோர் கூறுகின்றனரே —

**கங்கபட்டர்** — ஆம், இதை எண்ணி வருந்தவேண்டா,
விசாரிப்போம், வாரும்.

[அனைவரும் போகின்றனர்]



## முதற் களம்

**இடம் :** அந்தப்புரம்.

**காலம் :** பிற்பகல்.

**பாத்திரங்கள் :** விராடன், சுதேஷ்ணை.

**விராடன்** — நீ என்ன சொன்னாலும் வற்காது ; இந்தக் காரியம் யாருக்கு அடுக்கும் ! தெய்வம் பொறுக்குமா — தருமம் தாங்குமா — பரம சண்டாளனுக்காகப் பரிந்து பேச வருகிறாயே.

**சுதேஷ்ணை** — ஐயோ, நான் பரிந்து பேச வில்லையே, அவன் இருந்த நிலையைச் சொல்லவந்தேன்.

**விராடன்** — என்ன நிலை, இறந்துவிடுவானோ ?

**சுதேஷ்ணை** — இறந்துவிடுவான் போலத்தான் இருந்தது, இல்லாவிட்டால் நான் அப்படிச் செய்ய இசைவேனா !

**விராடன்** — இறந்துவிடுகிறவன் எழுந்து ஓடி வந்தானே ! இதை யாரேனும் கேட்டால் நகைப்பார்களே. குணசாலிகள் குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் ; குற்றத்தை மறைப்பது

குணக்கேடல்லவா. யாரா யிருந்தால் என்ன — நியாயத்திற்கு உற்றவரென்றும், மற்றவரென்றும் உண்டோ.

**சுதேஷ்ணை** — ஐயோ, நான் அப்படி வேற்றுமையாக நினைக்கவில்லையே — அவன் இருந்த நிலையையும், பேசிய பேச்சையும் கண்டு மதி மயங்கிவிட்டேன்.

**விராடன்** — அவன் நிலையைக் கண்டு இரங்கிய நீ, மற்றவர் நிலையையும் கண்டு இரங்க வேண்டாவோ இதனாலேயே தெரிய வில்லையா உன் மனோபாவம் — உன் வஞ்சகம் — உன் மனத்தி லிருந்த பக்ஷபாதம்.

**சுதேஷ்ணை** — நாதா, அவ்வாறு எண்ண வேண்டா; அவன் இருந்த நிலையைத் தாங்கள் கண்டிருந்தா லும் மனம் இரங்காமல் இருக்கமாட்டீர்கள்.

**விராடன்** — சரி, சரி, போதும், எனக்கும் பாதி பழி பங்கிட்டு வைக்கப் பார்க்கிறாயோ — உயிரினும் ஒழுக்கம் சிறந்தது; உயிரை விட்டாயினும் ஒழுக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும். ஒழுக்கம் தவறினவனிடத்தில் உனக்கு இரக்கம் என்ன — அப்படியாவது அவள் மனோபாவத்தை ஆராய்ந்து பார்த்தாயா? — 'குடிகள் இயற்றும் பாவம் கொற்றவனைச் சேரும்' என்பார்கள்; கொற்றவனே குற்றஞ்செய்தால் என்னாவது. வேலியே பயிரை அழித்த விதமாக இருக்கிறதே. முதலில் அவள் வந்து உன்னிடம் முறையிட்டுக்கொண் டிருந்தும், மறுபடியும் அவளை அங்கே போகச் சொல்லலாமோ.

**சுதேஷ்ணை** — நீங்கள் கேட்டுப் பாருங்கள், அவள் வந்து முறையிட்டபோது அவனை எவ்வளவு கண்டித்தேனென்று. வைத்தியரெல்லாம் பார்த்துக் கைவிட்டார்கள் என்று கேட்கவும் மனந் தாளாமல் நான் அங்கே சென்றேன். சென்று அவனைப் பார்த்தபோது என் மனம் மாறி-விட்டது. அப்போது அவனைச் சோதிக்கப் பல வகையில் கேட்டேன். அவனும் அவள் விஷய-மாகப் பரிந்து பேசி, அதைப்பற்றித் தன்னை மன்-னிக்கும்படி என்னை வேண்டினான். வேண்டியும் என்ன, அவன் தேறுவதாகக்காணும். அதனால் அவளை விவாகம் செய்துகொள்ளும்படி சொன்-னேன்; அவன் ஒப்புக்கொண்டான்; அதன்மேல் நான் அவளை அங்கே போகும்படி சொன்னேன். மற்றொன்றும் நான் அறியேனே

**விராடன்** — சரிதான், விவாகம் என்பது ஆண் பெண் இருவரில் ஒருவர் சம்மதித்தால் போதும் என்-பது உனது தீர்மானமோ—சரி, உனக்கு மாத்-திரம் சுயம்வரம் வேண்டும்—ஊருக்கானால் ஒன்-றும் வேண்டியதில்லை. நன்றாயிருக்கிறது! அவளை அனுப்பும்போது உனக்கு விவாகம் செய்து கொள்ள இஷ்டமா என்று கேட்டாயா? ஒன்றும் இல்லாமல் எப்படி அனுப்பலாம். என்ன இது, அவன் செய்தது குற்றமாகக் காணவில்லையே—குற்றத்திற்குக் குரு பீடமாக நீயே ஏற்பட்டு-விட்டாயே.

**சுதேஷ்ணை** — நாதா, இப்படியெல்லாம் வரும் என்று எனக்குத் தெரியாது. பின்புத்தியால் பிழைசெய்து-விட்டேன். அவளை அங்கே அனுப்பிவிட்டால் அவன் கேட்டுத் தெரிந்துகொள்ளுவான் என்று எண்ணினேன். தெரியாமல் செய்த பிழைக்கு என்ன செய்வது! என்னை மன்னிக்கவேண்டும்.

**விராடன்**—உன்னை மன்னிப்பதாவது; என் விதியைத்-தான் வெறுக்க வேண்டும். தெரியாமல் செய்-தேன் என்றால் குற்றந் தீர்ந்துவிடுமா—தெரி-யாமல் தேள் கொட்டினால் விஷம் ஏறாமலிருக்-குமா — நீ வேறொருவர்க்காக இப்படிச் செய்-திருப்பாயா? இதை யார் நம்புவார்கள்—ஐயோ உலகம் உள்ளளவும் இப்பழி நீங்காதே — இதற்-காகவா நாம் உலகில் உடல் எடுத்தது!

**சுதேஷ்ணை** — பிராணேசா, வருந்த வேண்டா, ஏதோ ஆராயாமல் செய்துவிட்டேன். அவள் மனதிலே இவ்வளவு உறுதியுள்ளதென்று உணரா-மற் போனேன். விவாகம் செய்துகொள்வதில் விருப்பமில்லாமல் போகுமா, அவனும் அழகும் ஆண்மையும் உள்ளவனாயிற்றே, என்று எண்ணி-விட்டேன். இவ்வளவு விபரீதத்திற்கு வரு-மென்று கொஞ்சமும் நான் எதிர்பார்க்கவில்லை.

**விராடன்** — தெரியாமல் செய்தாய் என்பது உண்மை-தான். கால வித்தியாசத்தினால் உயர்ந்தோர் தாழ்வதும், தாழ்ந்தோர் உயர்வதும் இயல்பல்-லவா. நமது வீட்டுத் தோழிதானே என்று நீ

இழிவாக எண்ணிவிடலாமா—அவன் மனத்தில் அந்த வகையான அலக்ஷியம் தோன்றி யன்றோ அடாத காரியம்செய்யத்துணிந்தான். கற்புடைய மங்கையர்க்குக் கணவனே கடவுள். மற்றையோர் மன்னராணாலும் அவர்களுக்கு லக்ஷ்யமில்லை, அடிமையாயினும் அவள் அந்த நீதியை உணர்ந்தாள்; நீ அரசன் மனைவியாக இருந்தும் அநீதியினால் பழியும் பாவமும் தேடிவைத்தாய். இதை யோசித்தால் யார் அடிமை! யார் அரசி!

**சுதேஷ்ணை** — நான் செய்த குற்றத்திற்கு இதனினும் தண்டனை வேண்டுமா — அடிமை யென்று அலக்ஷியமாக நினைக்கவில்லையே — அவளை எவ்வளவு இதமாக இரங்கிக் கேட்டுக்கொண்டேன்; அவளையே கேட்டுப்பாருங்கள்.

**விராடன்** — எல்லாம் கேட்டு ஆயிற்று; நான் மட்டுமா கேட்டேன், நாடு முழுவதும் கேட்டது. அவள் அங்கம் பதறி அலங்கோலமாக ஓடிவந்து விழுந்ததைக் கண்டால் யாருக்குத்தான் மனம் இரங்காது. அவள் ஓடிவந்தும், அந்தச் சண்டாளன் பின் தொடர்ந்து ஓடிவந்தானே—ஆஹா, அப்போதே அவனை என்ன செய்திருக்க வேண்டும்! திகைத்துச் சிந்தை கலங்கி நின்றுவிட்டேன்; அதனாலல்லவா அவன் தப்பினான்.

**சுதேஷ்ணை** — மேலும் மேலும் கோபிக்கிறீர்களே, மன்னித்துக் கொள்ளுங்கள்.

**விராடன்** — சரி, இருக்கட்டும், இனி அந்தச் சண்டாளன் அத்துமீறி நடப்பானானால் அணுவளவும் மன்னியேன், ஞாபக மிருக்கட்டும்.

**சுதேஷ்ணை** — நாதா, அப்படியே பார்த்துக்கொள்ளுகிறேன்; கோபிக்க வேண்டா. இனிமேல் இந்த வழியே வரவேண்டா என்று கண்டித்துச் சொல்லிவிடுகிறேன்; அவனும் வரமாட்டான்.

**விராடன்** — வரமாட்டானே, அவனுக்கு மானம் என்பதும் ஒன்று உண்டோ. முன்பு கண்டித்ததால் வந்த பயன் என்ன?

**சுதேஷ்ணை** — இல்லை, இந்த முறை கண்டிப்பாகச் சொல்லிவிடுகிறேன்; அதற்கும் மீறினால் வந்ததை அடைகிறான்.

**விராடன்**—கண்டிதமாகச் சொல்லு; அவளையும் கண்டு ஆறுதல் கூறு.

**சுதேஷ்ணை** — அப்படியே சொல்லுகிறேன்.

[போகின்றனர்]



## இரண்டாங் களம்

**இடம் :** அந்தப்புரம்.
**காலம் :** இரவு.
**பாத்திரங்கள் :** விரதசாரணி, பிருகந்நளை.

[விரதசாரணி ஒரு சோலையில் பிருகந்நளையைச் சந்திக்கிறாள்.]

**பிருகந்நளை** — கண்மணீ, வருந்தாதே, வருந்தி என்ன பலன்; நமது காலபலனை நினைக்கவேண்டும், நான் உனக்கு முன்னமே சொல்லவில்லையா ?

**விரதசாரணி** — காலபலனை நினைக்காமலா இதுவரையில் வந்ததையெல்லாம் பொறுத்தேன். எவ்வளவென்று பொறுக்கலாம் ! ஐயோ, என் உயிரை வைத்துக்கொண்டு இன்னும் இவ்வுலகில் வாழலாமோ.

**பிருகந்நளை** — நீ என்ன செய்வாய், உன்னால் என்ன நேர்ந்தது. எங்கும் துஷ்டர்கள் உண்டு. நம்மை உள்ளபடி உணர்ந்திருந்தால் அவனும் அப்படி நினைத்திருக்கமாட்டான் ; அவளும் அப்படிக் கட்டளையிட உள்ளந் துணிந்திருக்கமாட்டாள். இப்போது அவன் என்ன செய்தான் ? — கண்மணீ, உள்ளதைச் சொல்லாமல் இப்படி வருந்தினால் எப்படி ? நடந்ததைச் சொல்லு.

**விரதசாரணி** — நடந்ததை என்னென்று சொல்வது; என் உள்ளம் நடுங்குகிறதே! அந்தப் பாவி யிருந்த அறையில் அடியெடுத்து வைத்ததும் போதும், நான் பட்டதும் போதும். பாலை வைத்துவிட்டுத் திரும்பினேன்; திரும்பு முன், என்னைத் தடுத்து, பித்தனைப்போல் பிதற்றினன். நான் என்ன சொல்வேன், என்னால் ஆன மட்டும் நீதி சொன்னேன்; சொல்லி என்ன பலன் —

— ருகந்நளை — பித்தம் பிடித்தவனுக்கு நீதி சொல்லி என்ன பயன்! பிறகு,

**விரதசாரணி** — சொன்னேன், திரும்பவும் அவன் தன் எண்ணத்தையே பன்னிப் பன்னிப் பேசினன். வணங்கினன், வாழ்த்தினன், கும்பிட்டான் —

**பிருகந்நளை** — அடா மூடா, கேடுகாலம் கிட்டிக் கொண்டதோ — பின்பு?

**விரதசாரணி** — விட்டுவாவும் கூடவில்லை, அவனுக்கு விடை சொல்லவும் முடியவில்லை. வெளியே வந்துவிடத் துணிந்தேன். அப்போது, அந்தப் பாவி எழுந்து என்னைப் பிடிக்க வந்தான்.

**பிருகந்நளை** — பிடிக்கவும் வந்தானு! பிறகு?

**விரதசாரணி** — பிறகு என்ன, ஓடாதே என்றான்; அதன்மேல், 'நீ என்னை விவாகம் செய்து கொள்ளத் தடையென்ன?' என்றான். முடியாது, நான் கன்னிகை அல்ல என்றேன். அப்போதும் அவன் கேட்கவில்லை.

**பிருகந்நளை** — கன்னிகை அல்லவென்று சொல்லியும் கேட்கவில்லையா —

**விரதசாரணி** — கேட்கவில்லை, நான் சொல்லுவது பொய் என்று எண்ணி, 'பொய் சொன்னாலும் விடேன்' என்று தொடர்ந்து வந்தான். நான் ஓடினேன், அவன் தொடர்ந்தான், நிற்க இடமில்லாமல் நேரே ஓடி அரசன் சமுகத்தில் விழுந்தேன்; அதுவரையில் அவனும் தொடர்ந்தான்.

**பிருகந்நளை** — தொடர்ந்தானா — அரசனும் கண்டானா — அண்ணாவும் கண்டாரா — ஐயோ! பிறகு?

**விரதசாரணி** — பிறகு, நடந்ததை முறையிட்டேன்; அவர்கள், 'விசாரிப்போம், அந்தப்புரம்போ' என்றார்கள்; வந்துவிட்டேன். இனி என்னால் உங்களுக்கு இடையறாத துன்பமே உண்டாகும். அதைவிட என் உயிரை மாய்த்துக்கொள்வதே நலம்.

**பிருகந்நளை** — இப்போது என்ன செய்யலாம். அவன் உன்னைக் கன்னிகையென்று எண்ணிவிட்டான்; கண் தெரியாமல் கெட்டான். இருக்கட்டும், யோசிப்போம், நீயா இதற்கு மனம் வருந்துவது!

**விரதசாரணி** — இதைவிட இன்னும் என்ன துன்பம் வரவேண்டும்! எல்லோரும் சூழ இருந்தும் என் துன்பத்தைப் போக்குவாரில்லையே!

**பிருகந்நளை** — அப்படி நினையாதே, ஒரு நொடி. ஆயினும் கொஞ்சம் யோசிக்கிறேன். இது அரசன் வரையில் எட்டிவிட்டது; இனியும் அவன் அவ்வாறு செய்வானா — பார்ப்போம்.

**விரதசாரணி** — அரசிவரையில் எட்டியதற்கு என்ன அவன் அஞ்சினான்; அவன் அரசனுக்கும் அஞ்சான், ஆண்டவனுக்கும் அஞ்சான். அவன் அகங்காரத்தினால் தலைதெரியாமல் திரிகிறான். அவனை அடக்குவார் யார். அவனாலேயே இந்த அரசு நிலைக்கிறதாமே; இன்னும் என்ன இருக்கிறது.

**பிருகந்நளை** — விராடனை அவ்வாறு நினையாதே; அவன் உத்தமன். அவன் அறிந்தபின் தீங்கு நடவாது. அரசனுக்கும் மீறி அப்பாதகன் மற்றொரு முறை ஏதேனும் செய்தால், அவனைத் தீர்த்துவிட வேண்டியதே. இனி வருந்தாதே, அதன்பிறகும் அம்மூடனுக்கு இரங்கலாகாது.

**விரதசாரணி** — என்றால் ஏன் உங்கள் எல்லோருக்கும் இவ்வளவு கஷ்டம். அவனைத் தீர்ப்பதென்றால், நம்மை அனைவரும் உணர்வர்; நாம் மறுபடியும் வனவாசமும், அஜ்ஞாதவாசமும் ஆரம்பிக்கத்தானே வேண்டும். ஏன் அவ்வளவு துன்பம். துன்பம் என்னோடு தொலைந்து போகட்டும்.

**பிருகந்நளை** — அதையே பிடிவாதமாகப் பேசாதே ஒருவரும் அறியாமல் அவனை ஒழித்துவிடவேண்டும். என்ன செய்யலாம் (யோசிக்கிறாள்) ஆம், நீ சும்மா இரு. இன்னொருமுறை உன்னிடம் வந்து ஏதேனும் பேசினால் ஓர் இடம் குறிப்பிட்டு அங்கே வரச்சொல். பிறகு, அங்கு அண்ணாவை அனுப்பி, அவனை யமலோகத்திற்கு அனுப்பிவிடலாம். நான் இந்த உருவை ஒரு வருஷம் மாற்றக்கூடாதே!

**விரதசாரணி** — ஆமாம், அவர்தான் சரி, கலகம் தெரியாமலே காரியத்தை முடித்து விடுவார். உருவத்தையும் மாற்ற வேண்டியதில்லை. அந்தப் பாவி இதோடு ஒழிந்தால் ஒழியட்டும்; இல்லா- விட்டால் ஒரே முறையாக இவ்வுலகத்தை விட்டு ஒழிந்து போகட்டும். அதற்குத்தான் காலம் கிட்டிக் கொண்டிருக்கிறது.

**பிருகந்நளை** — இனி அஞ்சாதே.

**விரதசாரணி** — இன்னும் என்ன அச்சம்.

**பிருகந்நளை** — சரி, போகலாமே.

[**போகின்றனர்**]



# மூன்றாங் களம்

**இடம் :** நந்தவனத்திற்குச் செல்லும் வழி.

**காலம் :** முன் மாலை.

**பாத்திரங்கள் :** விரதசாரணி, கீசகன்.

[விரதசாரணி ஒரு தட்டில் புஷ்பம், தாம்பூலம், பழம் முதலிய கொண்டு போகிறாள் ; கீசகன் தொடர்ந்து வருகிறான்]

**விரதசாரணி** — உமக்கு விடை சொல்ல என்னால் முடியாது, நில்லும்.

**கீசகன்** — பெண்மணி, சற்று நில், ஒரு வார்த்தை.

**விரதசாரணி** — உம்மோடு எனக்கு ஒன்றும் வார்த்தையில்லை ; நான் போக வேண்டும்.

**கீசகன்** — வார்த்தை சொல்லுவதும் தவறு — ஒரு க்ஷணம் நின்று விடை சொல்லு.

**விரதசாரணி** — ஆம், பெண்டிர் ஆடவரோடு தனித்து வார்த்தை சொல்வதும் தவறுதான். அதிலும் உம்மிடம் நின்று வார்த்தை சொல்ல நேரமில்லை.

**கீசகன்** — நேரமில்லையா ? — மனமில்லையா ?

**விரதசாரணி** — இரண்டும் இல்லை ; வீணே வருந்தாதீர் ; பழிக்கும், பாவத்திற்கும் ஆளாகாதீர்.

**கீசகன்** — பெண்மணி, வேண்டா, நான் சொல்வதைக் கேள் ; நான் இவ்வளவு வேண்டியும் உன் மனம் இரங்கவில்லையா — என் கலக்கத்தைக் கண்டால் கருங்கல்லும் உருகுமே !

**விரதசாரணி** — கற்புடையார் மனத்தின்முன் கருங்கல் என்ன செய்யும் — எல்லாவற்றிற்கும் மனமிரங்கலாமோ — காரியாகாரியங்களைக் கருத வேண்டுவது கருமமல்லவா.

**கீசகன்** — கருத வேண்டா என்று சொல்ல வில்லையே ; கல்யாணம் செய்துகொள்ளத் தடையென்ன ?

**விரதசாரணி** — அதற்கு அப்போதே விடை சொல்லி ஆயிற்று ; இன்னும் பன்னிப் பன்னிப் பேசாதீர்.

**கீசகன்** — பெண்மணீ, போக்குகள் சொல்லிப் புறக்கணியாதே ; நான் சொல்வதைக் கேள் ; என்னை எப்படியாவது காக்கவேண்டும்.

**விரதசாரணி** — அரசே, வேண்டா ; ஒரு பெண்ணின்பொருட்டுப் புகழை இழக்கலாமோ — வீரமுள்ள ஆடவர் தம் மனத்தையடக்கி, நல்வழியில் நடந்து, புகழுடம்பை என்றென்றும் நிறுவ வேண்டும். உமது எண்ணத்தை விடும். காவலராகிய உம்மை ஒரு கன்னிகையா காப்பது ! என்னதான் மயங்கினும் இவ்வாறு பேசுவாரும் உண்டோ. நானோ

அநாஸ்த. என்னிடத்தில் உமக்கு இரக்கமுண்டானால், இனியாவது என்னை வருத்தாமல் அகன்று போய்விடும்.

**கீசகன்** — பெண்மணீ, எல்லாம் சொல்லிக்கொண்டே வந்து, முடிவில் என்னைப் போகும்படி தானே சொல்லிவிட்டாய். உன்னை நான் மணந்துகொண்டால் என் கீர்த்திக்கு என்ன குறை. பழியேது, பாவம் ஏது — அப்போதன்றோ என் கீர்த்தி உலகெங்கும் விளங்கும். பொன்மலர் வாசனையும் அடைந்ததாகுமே — இனியாவது மனம் இரங்கலாகாதா ?

**விரதசாரணி** — மறுபடியும் மணம் என்ற வார்த்தை வேண்டா. உம்முடைய உன்னத நிலையையும் உள்ளக் கருத்தையும் எண்ணிப் பாரும். நான் போகிறேன்.

**கீசகன்** — எண்ணுமலா — எண்ணி என்ன பயன்; என் நெஞ்சம் நிலைக்கவில்லையே! உன் அழகு என் மனத்தை அழிக்கிறதே! பெண்மணீ,

அகவல்

சுரும்புகள் தாமே தொகுத்த தேனினை
வருந்தக் கொள்ளும் மாந்தரை அவைதாம்
மேலுற விழுந்து கொட்டி வருத்தினும்
ஏல அதனை எடாது விடுவரோ
உற்ற அத் தேனினால் உடல்நோய் தன்னை
முற்றும் நீக்க முயலா திருப்பரோ.

இதையாவது நீ எண்ணிப் பார்க்கலாகாதா; இதில் ஒன்றுங் குற்றமில்லை.

**யசோதசாரணி** — அரசே, எதற்குத்தான் உவமையில்லை. நீர் கொண்ட விருப்பம் தீயதென்று உமக்கே தோற்றவில்லையா, அதுவும் உமது உபமானத்தினாலேயே விளங்க வில்லையா—உமது தாரகையின் பொருட்டு என் உயிரினும் சிறந்த கற்பினை இழத்தல் ஏற்றதோ, பெண்களுக்குக் கற்பே கருத்தனம் — அந்தக் கருந்தனத்தை இழந்தால் அவர்கள் வாழ்நாள் முற்றும் அல்லலுற்று அழிந்துபட வேண்டுமே — ஐயோ, இந்தக் கேடு அனைத்தும் இம்மையில் நேருவதோடு, மறுமையிலும் அழியா நரகம் நேருமே — இதை உணர்ந்தும் உமக்கு என்னிடம் இரக்கம் பிறக்கவில்லையா — வேண்டா, இந்த எண்ணத்தை விட்டு விடும், நான் போகிறேன்.

**கீசகன** — பெண்மணீ, நான் குற்றம் ஒன்றும் சொல்லவில்லையே.

அகவல்

வெளிச்சந் தரவே விளக்குகள் உள்ளன
ஒளியணி யிருப்பதும் உடற்கணிந் திடவே
மலர்அலர்ந் திடுவதும் வாசனை தரற்கே
ஆகும் என்பதை அறியார் யாரே
பாகுயர் மொழியாய் பகரின்நின் அழகால்
ஆகிய அழகை அவனியில் தந்து
நிலைபெறச் செய்தல் நீதி யன்றோ
குலவுநின் அழகைக் குறிக்கவும் வேண்டுமோ.

**விரதசாரணி** — அரசே, போன வழியி லெல்லாம் புத்தியை விடுவதா — நீர் சொல்லும் விஷயம் உம்மையே கண்டிக்குமே.

ஒளிதரு தற்கா உற்றநல் விளக்குகள்
எளியவாம் பொருளை எரிப்பதுந் தகுமோ
அழகுறப் பூணும் அரியநல் லணிகளைப்
பிழையுறப் பறித்துப் பெறுதலுந் தகுமோ
நறுமணந் தந்திட நலந்திகழ் மலரினை
முரணுறக் கசக்கி மோந்திடல் தகுமோ
பழங்கள் தந்தே பண்புறு தருவினை
மழுங்க அறுத்து மாய்த்தலுந் தகுமோ
அதுபோல்
வாய்ந்த அழகை மனஞ்செல் வழியினில்
தேய்ந்திடச் செய்து செல்லலுற் றழிவதும்
நீதியா மெனவே நினைத்தலும் தகுமோ.

**கீசகன்**—ஐயோ, மணமென்றால் மறுக்கிறாய்—உனக்கு மணம் முடிந்திருந்தால், அம்மகானுபாவன் உன்னைவிட்டு விலகியும் இருப்பானே — பெண்மணி, நீ பேசுவது ஒன்றும் பொருத்தமாக இல்லையே.

**விரதசாரணி** — பொருத்தமாக இருக்கிறதோ இல்லையோ, அதைப்பற்றி உமக்கேன் வருத்தம். நான் உண்மை யுள்ளவளாக உமக்குத் தோன்றாத போது என்னிடத்தில் உமக்கு வார்த்தை யேன்? இனியாகிலும் செல்லும், நான் போகவேண்டும்.

**கீசகன்** — உன் புத்தியை என்னவென்று புகழ்வேன்! வனப்பினால் வென்றதோடு வார்த்தையாலும்

வெல்லுகிறாயே—உனக்கு வந்தனம்செய்கிறேன், வணங்குகிறேன், வாழ்த்துகிறேன், முடியையும் தாழ்த்துகிறேன்; மனமுவந்து என்னை மணஞ் செய்துகொள். இதில் பிழை ஒன்றும் இல்லை.

**விரதசாரணி** — உமக்குத் தோற்றுமா பிழை! பிழை தோன்றினால் வந்தனமும், வணக்கமும், வாழ்த்தும், தாழ்த்தும் எனக்குச் செய்ய எண்ணுவீரா!

(விருத்தம்)

மாந்தர்கள் மகிழ்ந்து செய்யும்
வாழ்த்தொடு வணக்கத் திற்கிங்
கேந்துநன் னிலைமை வாய்ந்தோர்
இறைவரே யாவர் அந்தோ
ஆந்துணை யின்றி யிங்கே
அடிமையாய்ப் பட்ட என்னைக்
காந்திய மதியால் வாழ்த்தக்
கருதுதல் நீதி யாமோ.

யோசித்துப் பாரும், இனி இங்கு நிற்க எனக்கு நேரமில்லை, நான் போகிறேன்.

**கீசகன்** — நீ போனால் என் உயிரும் போகும்; இனி, உன் வாயில் உள்ளது என் வாழ்வு. உனக்குப் பின்னால் சென்று உயிர் விடுவதைவிட, உனக்கு முன்னால் நின்றே உயிர் விட்டுத் திருப்தி யடைகிறேன்; உன் கையால் போனால் இன்னும் உத்தமம்; இதோ, இவ்வாளைப் பிடி, வெட்டிவிடு.

[வாளை நீட்டுகிறான்]

**விரதசாரணி** — என்ன இது, இப்படியும் மனம் உடை வார் உண்டோ! உமது வீரம் இவ்வளவுதானா — உமது உயிரை நானா வாங்குவது ; இது தகாது.

[வாளை வாங்கி எறிந்துவிடுகிறாள்]

**கீசகன்** — ஐயோ, என் உயிர் ஊசலாடுகிறதே! உனக்கு இரக்கம் இல்லையா! இனி எங்கே சென்றாலும் விடேன். எனக்கு என்ன வரினும் வரட்டும். சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் ஆழந்தானே.

**விரதசாரணி** — இந்தப் பிடிவாதம் உமக்குத் தகாது. நன்னெறியை எண்ணி அமைந்திரும்.

**கீசகன்** — மறுபடியும் அதையே சொல்கிறாயே — வேண்டா, எனக்கு மணமாவது கொடு, மரண-மாவது கொடு ; இரண்டில் ஒன்று கொடாமல் உன்னைப் போகவிடேன்.

[தொடப் போகிறான்]

**விரதசாரணி** — தொடாதீர், தூர நில்லும் ; இரண்டில் ஒன்று வேண்டும் —

**கீசகன்** — ஆம், இரண்டில் ஒன்றுதான்.

**விரதசாரணி** — சரி — அப்படியே ஆகட்டும்.

**கீசகன்** — என்ன ஆகட்டும் ?

**விரதசாரணி** — உமது இஷ்டப்படியே ஆகட்டும்.

**கீசகன்** — கண்மணி, எப்போது ? இதை முன்னமே சொல்லியிருக்கலாகாதா ? பரீக்ஷித்தாயோ ?

**விரதசாரணி** — அதெல்லாம் எதற்கு — நாளை இரவு பதினைந்து நாழிகைக்கு அந்த மாஞ்சோலையில் வந்து இரும், வருகிறேன்.

**கீசகன்** — மாஞ்சோலையிலா — நாளை இரவு பதினைந்து நாழிகைக்கா —

**விரதசாரணி** — ஆம், இன்னும் தடை செய்யாதீர் — அர்ச்சனைக்குக் காலதாமதமாகிறது.

**கீசகன்** — நாளைக்குத்தானே ?

**விரதசாரணி** — ஆமாம்.

**கீசகன்**—நான் காத்துக்கொண்டிருக்கிறேன்; கண்மணி, போய் வருகிறாயா — [விரதசாரணி போகிறாள்] (தனியே) என் ஆருயிர் அகன்று போவதுபோல் இருக்கிறதே — நாளை இரவு பதினைந்து நாழிகையா — அறுபதும், பதினைந்தும் எழுபத்தைந்து நாழிகை தொலையவேண்டுமே — ஏழுபத்தைந்து நாழிகை என்றால் கொஞ்சமா — இந்த இரவெல்லாம் போய், நாளைப் பகலெல்லாம் கழிந்து, இரவு வந்தும் பதினைந்து நாழிகை தொலைய வேண்டுமே !—இன்று இரவோ—நாளை இரவோ ! — (யோசிக்கிறான்) நாளை இரவுதான். என்ன செய்வது ! போய்ப் பார்ப்போம்.

[போகிறான்]



## நான்காங் களம்

**இடம் :** சோலையில் ஓர் இடம்.
**காலம் :** பின்மாலை.
**பாத்திரங்கள் :** பலாயனன், விரதசாரணி.

[விரதசாரணி சோலையி லிருந்து வரும் வழியில் பலாயனனைச் சந்திக்கிறாள்]

, ஏதேனும் விசேஷமுண்டா ?

**விரதசாரணி** — விசேஷமில்லாமலா —

**பலாயனன்** — திரும்பவும் வந்தானோ ?

**விரதசாரணி** — இன்னும் அரை நாழிகையும் ஆகவில்லையே ; வரும் வழியில் மடக்கிக்கொண்டானே.

**பலாயனன்** — ஆனால் சரி, இதோ தொலைத்துவிட்டேன் ; அவனை வரச் சொன்னாயா ?

**விரதசாரணி** — ஆம், சொன்னேன், சொல்லாவிட்டால் என்னை விடுகிறானா.

**பலாயனன்** — அப்படியா — எப்போது ? எங்கே ?

**விரதசாரணி** — நாளை இரவு பதினைந்து நாழிகைக்கு அந்த மாஞ்சோலையில் வந்திருக்கச் சொன்னேன்.

**பலாயனன்** — வழியிலா மடக்கினான்?

**விரதசாரணி** — ஆமாம், வழியில் மடக்கிக்கொண்டு ஏதேதோ சொன்னான். என்னால் கூடியமட்டும் பொறுமையோடு நியாயம் சொன்னேன்; என்ன சொல்லியும் அவன் மண்டையில் ஏறவில்லை. தரையில் விழுந்தான்—தடுத்தேன்;—தற்கொலை செய்து கொள்ளத் துணிந்தான் — என்ன செய்வது—என் விதியை வெறுத்துக்கொண்டு, 'வேண்டா' என்றேன்; —எல்லாரும் இருந்தும் எனக்கு இந்தக் கதி நேரவேண்டுமா —

**பலாயனன்** —

மோகனம்] **பல்லவி** [ஆதிதாளம்

அழவேண்டா மடமயிலே — உட்காந்
தல்லோ படிக்க வேண்டும் (அழ)

**அநுபல்லவி**

பழிவரு மென்றஞ்சாத
பாவி துடித்துச் சாகும்
படிக்குச்சம்பாத் தாள்போல்வாரி
அடிக்களென்ற ளலே யாகும்

**(அழவேண்டா)**

**சரணங்கள்**

எழுங்கனல்போல்சீறி அப்போதே
அவனைக் கொல்வேன்
எனைக்கண்டோர் யாரிந்த
நிர்வாகி — வீம
னேயென்று நைப்பாரப்பால்
ஒன்றுபோய் ஒன்ருய்ப்பட்ட
தெல்லாம்ஆற் றிற்கரைத்த
புளியாகிப் — பின்னும்
பழைய கந்தன் கதைபோல்
ஆமென்றந் நேரந்தாங்கிப்
பார்த்தேனினிக் கொல்வேனெம
மாத்ரமவ ஞேர்சுண்டாங்கி
(அழவேண்டா)

கருதும் குசவருக்குப் பலநாள்
வேலை கைத்தடிக்
காருக் கொருநாள்வேலை
எனல்போலே — வீமன்
காரியத்தைக் கெடுத்தா
னென்பார் என அடங்கிக்
காலம்பார்த் திருக்கிறேன்
ஒருகாலே — இனிப்
பொருவில் மாதர்கள் பின்னே
திரியுமப் பேயன் சள்ளை
பொட்டென அடக்கிக் கொல்லா
விட்டால்நான் என்னஆண் பிள்ளை
(அழவேண்டா)

ஆஹா அந்தச் சபையில் உன் அலங்கோலத்தைக் கண்டபோதே அவனைத் தூளாக நொறுக்கி யிருப்பேன்! அண்ணு கூறிய குறிப்புரையால் அடங்கி வந்துவிட்டேன்; வருந்தாதே, நாளைக்கே அவனை ஒழித்துவிடலாம்.

**விரதசாரணி** — இல்லாவிட்டால் அவன் சள்ளை ஒழி-யாது. எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லையே! 'எங்கே சென்றாலும் விடேன், மானத்தை விட்-டேன், இனி மரணம் வந்தாலும் உன்னால் வரட்-டும்' என்றானே. அவனுக்கு வருவது அவன் வாயிலேயே வந்துவிட்டதோ.

**பலாயனன்** — 'கேடுவரும் பின்னே, மதி கெட்டு வரும் முன்னே' என்பது பொய்யாகுமா—இருக்கட்டும், நீ ஒன்றுக்கும் அஞ்சாதே, நாளை வரையில் பொறு. ஒருவரும் அறியாமல் அரண்மனைக்குப் போ — நான் பின்னால் வருகிறேன்.

**விரதசாரணி** — நாளைக்கு எப்படி?

**பலாயனன்** — எப்படி என்ன, நீ அரை நாழிகை முன்-னமே புறப்பட்டு அந்தச் சோலையில் உள்ள குளக்கரைக்கு வா; நானும் வந்து சேருகிறேன்.

**[போகின்றனர்]**



## ஐந்தாங் களம்

**இடம் :** மாஞ் சோலை.

**காலம் :** நள்ளிரவு.

**பாத்திரங்கள் :** கீசகன், பலாயனன், விரதசாரணி.

[கீசகன் சோலையில்வந்து விரத-சாரணியை எதிர் பார்க்கின்-றான்; அவள் வாராமைகண்டு வருந்துகின்றான்.]

**கீசகன்** — ஆஹா என்ன இது, இன்னுமா பதினைந்து நாழிகை ஆகவில்லை! நாம் இங்கு வந்தே இரண்டு மூன்று நாழிகைக்குமேல் இருக்குமே — (மேலே பார்க்கிறான்.) நிலவும் உச்சிக்கு வந்துவிட்டதே— தனியேவர அஞ்சுகிறாளோ—தமக்கை ஏதேனும் வேலையிட்டாளோ — இந்நேரம் சயனத்திற்குப் போயிருப்பாளே — தோழியர் சுற்றிக்கொண்டு இருக்கிறாளோ — தொந்தரவென்று சூதாகச் சொல்லிவிட்டாளோ — அப்படி யிருக்குமா — இராது—உத்தம லக்ஷணங்களுக்கு ஏற்க உத்தம குணமும் இருக்குமே — ஏமாற்றுவதென்றால் இடித்துக் கூறுவாளா—ஏதோ தடையாகத்தான்

இருக்கும் — அதென்ன சலசலவென்று கேட்கி-றது — காலடிச் சத்தந்தானே — கண்மணீ, இங்கே இருக்கிறேன்! — (செல்கின்றான்) யாரோ வந்தாற்போல் இருந்ததே — அடடா, மரத்தைக் கண்டா மயங்கினேம் — இதுவும் விதியா —

(பாடுகிறான்)

கலித்துறை

வீணே விரகங்கொண் டேனென் மனங்கவர் மெல்லிவரக்
காணேன் மதிவந்து காய்கின்ற தங்கென்ன காரணமோ
ஊணேது மில்லை உறக்கமு மில்லை உயருமரத்
தூணே உனக்குரைத் தேன்என்றன் நெஞ்சத் துயரத்தையே.

நாழிகைதான் ஆகாமல் இருக்கலாம் — வாராமல் இருக்க மாட்டாள் — உருத்துப் பேசுகிறவர்க-ளிடத்தில் உண்மை யிருக்கும். நாம் போயாவது அழைத்துக்கொண்டு வரலாமா, நாம் ஒரு வழியே போய் அவள் ஒரு வழியே வந்தால்—இந்தஇடத்-தைத்தானே குறிப்பிட்டாள் — இன்று இரவோ, நாளை இரவோ—நேற்று, நாளை இரவு என்றாள்— அது இன்று இரவுதானே — (பாடுகிறான்)

1. நிலையாய் நிற்கும் மாந்தருவே
   நீபோய் சொல்லாய் அவள்வரவே
2. என்நெஞ் சேபோல் அலையிலையே
   இரக்கம் என்ப துனக்கிலையே
3. இணையா இருக்கும் குருகீரே
   என்னிலை யைக்கண் டுருகீரே
4. நீங்கள் எல்லாம் செல்லீரோ
   நேயமு டன்வரச் சொல்லீரோ.

என்ன இது, இருந்தாற்போல் இருந்து இடக்கண் துடிக்கிறது. இடக்கண் துடித்தால், இன்பமோ, துன்பமோ — இடக்கண் இன்பந்தான் — இடக் கண் — இன்பம், சரியாகவே இருக்கிறது. துன்பம் என்ன இருக்கிறது — நமக்காவது துன்பமாவது! — நமனுக்காயினும் துன்பம் வரும் — நமக்கு வருமோ! — இதென்ன இடத்தோளும் துடிக்கிறதே — இன்று ஏதோ இடுக்கண் நேரும் போல் தோன்றுகிறது; இனிது முடியுமென்று எண்ணக்கூடவில்லை —

அகவல்

இனியது காதல் காதலே இனியது
இனியதாம் அதுதான் இயலாதெனினும்
இனியது காதல் இனிதுமெய்க் காதல்
தனியியற் காதல் சாரா விடத்தே
தோன்றும் துன்பினைத் தொலைத்திட நேரும்
ஏன்ற மரணமும் இனியதே யாகும்
ஆயினும் அந்தோ அன்னவை இரண்டில்
எதிங் கேற்ற முள்ளதென் றுணரேன்
காதல் இனியதேல் கைப்பதாம் மரணம்
மரணம் இனியதேல் மன்னிய காதல்
இரணந் தந்திடும் இன்னலே யாகும்
அதனால்
என்னுயிர்க் குயிரா எழுதரு காதலே
உன்னைப் பெறுதவம் உற்றே னாயின்
மன்னியிவ் வுலகில் மகிழ்ந்துயிர் வாழ்வேன்
துன்னுமக் காதல் சுகந்தரா தொழியின்

ஏயும் மரணமே இனிதெனக் கொள்வேன்
தூயகண் மணியாத் துலங்குறு காதலி
உன்னால் எதிங் குறினும் உறுக
என்னு லாவ திதுவே யன்றே.

யாரோ வருவது போல் தெரிகிறதே (உற்றுப பார்க்கிறான்) மங்கையோ, மரமோ — கண்மணீ, கண்மணீ, ஒருவருங் காணேமே — ஒருகால் வாராமலே நின்றுவிடுவாளோ — அப்படி எண்ணக் கூடவில்லை — வர மாட்டாள் என்று ஏன் என் மனம் எண்ணுகிறது. என் மனமே எனக்குச் சத்துருவாக இருக்கிறதே. இன்னும் சற்று நேரம் இருந்து பார்ப்போம்.

[கீசகன் ஒரு மரத்தடியில் உட்காந்து சாய்ந்து யோசிக்கின்றான். பலாயனன் விரதசாரணி போல் உடுத்துக்கொண்டு வந்து, அவளோடு இரக்சியமாகப் பேசுகிறான்]

**பாலயனன்** — கண்மணீ, எங்கே வரச் சொன்னாய் ?

**விரதசாரணி** — அந்தக் குளத்தருகில்தான்.

**பலாயனன்** — இதற்குள் வந்திருப்பானோ ?

**விரதசாரணி** — இன்னும் வாராமலா — சூரியன் எப்போது மறையும் என்று எதிர்பார்த்திருப்பானே.

**பலாயனன்** — சரி, இருக்கட்டும், நீ இந்த மரத்தடியிலேயே நின்றிரு. பிறகு நான் கூப்பிடும்போது வா ; அவசரப்பட்டு வந்துவிடாதே.

**விரதசாரணி** — ஐயோ — அவன் அதிக பலசாலி என்கிறார்களே!

**பலாயனன்** — பலசாலிதான் — வீமனுக்கு முன்னே வீரமோ! — அஞ்சுகிறாயோ?

**விரதசாரணி** — அச்சம் ஒன்றுமில்லை, கேட்ட விஷயம் நினைவுக்கு வந்தது.

**பலாயனன்** — அந்தக் கிம்மீரனைவிடவா இந்தக் கீசகன் கெட்டிக்காரன் — கல்லே காற்றில் பறந்தது, இந்த இலவம் பஞ்சு என்ன செய்யும். இங்கு இரு, நான் போய்ப் பார்க்கிறேன். (எட்டிப் போய்ப் பார்க்கிறான்; திரும்பி வந்து) அதோ பார்த்தாயா, மரத்தடியில் உட்கார்ந்து எண்ணமிடுகிறான் — என்ன எண்ணமிடுகிறானோ —

**விரதசாரணி** — எமனூர்க்குப் போகத்தான் எண்ணமிடுவான்! என்ன சொல்கிறான் பாருங்கள்.

**கீசகன்** — கண்மணீ, என் கண்ணும் பூத்துப் போகிறதே! இன்னுமா பதினைந்து நாழிகை ஆகவில்லை — கண்மணீ, தனித்து வரத் தயங்குகிறாயோ — இரவில் வர ஏங்குகிறாயோ — சோலையில் வரத் துடிக்கிறாயோ! — ஐயோ, என் நெஞ்சம் அலைகின்றதே!

**பலாயனன்** — அட சண்டாளா, உனக்கென்ன இறுதிக் காலமோ — (விரதசாரணியைப் பார்த்து) கண்மணீ, நீ சொன்னதில் ஒரு சிறிதும் குறை வில்லையே; தனியேயிருந்து இப்படித் தவிப்பவன், நீ எதிரில் நின்றபோது என்னென்ன பேசியிருப்பான்!

**விரதசாரணி** — இல்லாவிட்டால் இவ்வளவு தூரம் வந்திருக்குமா — வந்த்விடத்தில் நம் காலத்தைக் கழித்துவிட்டுப் போகலாமென்றால் இந்த நாச காலன் நடுவில் நின்றானே — என்ன செய்வது !

**பலாயனன்** — சரி, நீ இங்கேயே நில், நான் போய் அவனை முடித்து வருகிறேன்.

[விரதசாரணி ஒரு மரத்தடியில் நிற்கிறாள் ; பலாயனன் கீசகனருகிற் போகிறான்]

**கீசகன்** — இரண்டுமுறை ஏமாந்தோம், இன்னும் ஒரு முறையா — மூன்றாம் முறை முற்றுப்பெறும் என்கிறார்களே — கண்மணீ, வருகிறாயா — வந்தாயா — ஏன் இவ்வளவு தாமதம் — (எழுந்து அருகிற் செல்கின்றான்) கண்மணீ, என்ன மவுனமா யிருக்கிறாய் — இவ்வளவு நேரமாயிற்றே — இங்கு நான் எவ்வளவு நேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

**விரதசாரணி** — (மறைவில் தனியாக நின்று) காத்துக் கொண்டா இருக்கிறாய்! இரு, சற்று நேரத்தில் உன் உயிர் எங்கிருக்கிறதோ பார்ப்போம்.

**கீசகன்** — கண்மணீ, ஒரு வார்த்தையாயினும் பேசலாகாதா — இன்னும் உன்னை நான் வேண்ட வேண்டுமா—வேண்டினதெல்லாம் போதாதா — காலில் விழுந்தேனே — கையெடுத்தும் கும்பிட்டேனே—கடவுளாக எண்ணினேனே—இன்னும்

என்ன செய்வது! என்னை ஆட்கொண்டால் என் ஆயுள் முழுதும் உனக்கு அடிமையாக இருப்பேன். கண்மணீ, உன் எண்ணந்தான் என்ன?

கலித்துறை

நோய்முற்றி யிங்குத் தனியே யிருந்து நுணங்கனலில்
காய்முத்த மென்ன மெலிதரு வேளைக் கடைக்கணித்து
நீமுத்தந் தந்திங் கொருவார்த்தை யன்பின் நிகழ்த்திடிலுன்
வாய்முத்தஞ் சிந்தி விடுமோஎன் கண்ணில் வளர்மணியே.

கண்மணீ, இப்படி மவுனமாக இருப்பதைவிட மறுத்தே யிருக்கலாமே. கண்டிதமானவர்களிடத்தில் காருண்யம் இருக்கவேண்டுமே, உன் மனநிலையை எவ்வகையிலும் கணிக்கக்கூட வில்லையே. கண்மணீ, இன்னும் பிடிவாதம் வேண்டா. (அருகிற்சென்று தழுவிக்கொள்கின்றான்) ஆ, என்ன இது! மெல்லியல் வல்லியலாக இருக்கிறாயே! — நான் உன்னிடம் வைத்த ஆசையளவிற்கு உன் உடல் பருத்திருக்கிறதே — முற்றும் மாறிவிட்டாயோ! (கையைப்பிடிக்கின்றான், பலாயனன் இறுத்துகின்றான்) ஆ, கண்மணீ, வேண்டா. இவ்வளவு பலமா! வேண்டா, நானும் பிடிப்பேன், அஞ்சுகிறேன். வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்.

**பலாயனன்**— வார்த்தை வாயில் இல்லை—என் கையில் இருக்கிறது, வாங்கிக்கொள்; அடா துஷ்டா! பரதார கமனம் செய்யும் பரம சண்டாளா! இதோ

இந்தப் பிடியை நீ விலக்கிக்கொள் பார்ப்போம்.
இதற்குத் தப்பினால் நீ ஆண்பிள்ளைதான்.

[பலாயனன் பிடித்துத் தள்ளுகிறான்,
கீசகன் விழுகிறான்.]

**கீசகன்** — ஐயோ, விரதசாரணி, இதுவோ உன் கருணை! இதற்காகவா என்னை இங்கு வரச் சொன்னாய்! உண்மையை உரைத்திருக்கலாகாதா! — ஐயோ!

**பலாயனன்** — உண்மை உரைத்தாலும் உனக்கு உணர்ச்சி யுண்டோ — அவள் கன்னிகை அல்ல என்று மறுத்தும் உன் கருத்து மாறிற்றா? கெடு மதி கண்ணுக்குத் தோற்றமா — அறிவில்லாதவர்கள் ஆடுமாடுகளைப்போல் அழியவே வேண்டும்.

**கீசகன்** — ஐயோ, கண்மணீ, மணம் தருகிறேன் என்றாயே — இப்போது மரணம் தருகிறாயே! உன் அருளுக்கு இது அடுக்குமா?

**பலாயனன்** — அடா மூடா, இன்னுமா கண்மணீ, இதோ மரணத்தில்தான் மணம் இருக்கிறது, பெற்றுக்கொள்.

**கீசகன்** — மணமா —

**பலாயனன்** — மதிகேடா, யோசித்துப் பார் — இதோ, மரணம் என்பதில் மணமும் இருக்கிறது, ரணமும் இருக்கிறது.

**கீசகன்** — மரணமா — எனக்கா — பெண்வேஷங் கொண்ட பேயா, பெண் என்று இதுவரையில் பின்வாங்கினேன், நீயும் ஓர் ஆண்பிள்ளையா! நில் ஒருகை பார்ப்போம்.

**பலாயனன்** — பார்க்கவா போகிறாய்! அடா துஷ்டா, துடித்து விழு (ஓங்கிக் குத்துகிறான், கீசகன்ஏங்கிவிழுகிறான்) எழுந்துவா, இன்னும் ஒருகை பார்! அடா பதரே, இவ்வளவுதானா உன் ஆண்மை. இதற்காகவா இவ்வளவு துள்ளினாய் (அருகில்போகிறான்.) அடடா, உயிர்ப்பே இல்லையே! எவ்வளவு வீரன்! எப்படி மாண்டான்! இதுதானோ விதியென்பது! ஒழிந்து போ — அஜ்ஞாதவாச மில்லாவிட்டால் அன்றே ஒழிந்திருப்பாய். (திரும்பி திரௌபதியை நோக்கி) கண்மணி, காரியம் முடிந்துவிட்டது, இதோ பார், தரையில் விழுந்து உருண்டு கிடக்கிறான்.

**விரதசாரணி** — இவ்வளவிலா — ஐயோ, முடிந்து விட்டதா!

**பலாயனன்** — முடியாமலா — குற்றமுள்ள நெஞ்சுக்குக் கொலையும் வேண்டுமோ!

**விரதசாரணி** — ஐயோ, பாவம்! (அருகிற் சென்று)

அகவல்

அந்தோ வீர அரும்பெறல் வீர
இந்த விதியோ எய்தினை நீயே
இவ்வர சுக்கோர் எழிலர சாகும்

திவ்விய வீர தீர்ந்தனை அந்தோ
மானிடன் கொள்ளும் மனவன் மைக்கும்
தாமடங் காமல் தம்வலி காட்டி
நீங்கரும் தீமைகள் நிலகினில் உண்டால்
ஓங்கிய விதியே உன்வலி பெரிதே
மாற்றலர் அஞ்சும் வல்லியல் வீர
ஆற்றநின் மனத்தை யடக்கி யிருப்பின்
உலகம் புகழ உத்தமப் பெயரால்
நலனுர் பதவி நண்ணிட லாமே
ஐயகோ நினக்கவ் வருட்பெருங் கடவுள்
செய்யவே தன்னருள் செய்தங் குன்னைக்
காத்திடல் வேண்டும் கருதிடின் என்னினும்
சீர்த்த குணத்தினள் தீயஇம் மரணம்
நினக்குறு வண்ணம் நிகழ்த்தி யிருப்பவும்
தனக்கொரு வகையால் சார்பு கொள்ளவும்
எண்ணி யியற்றி இருந்திடற் காகும்
எனக்கிங் கதுதான் எய்திய நிலையால்
ஆதலின் என்னை அருட்பெருங் கடவுளே
தீதிலா வகையில் செறித்திட வேண்டும்.

**பலாயனன்** — ஆம், பாவம், அவன் நம்மை உள்ளபடி உணர்ந்திருந்தால் அவ்வாறு செய்திருக்க மாட்டான். என்ன செய்வது, அவன் விதி. நாம் போவோம். இனி இங்கிருத்தல் கூடாது.

[இருவரும் திரும்புகின்றனர்.]

**கீசகன்** — (வெருள விழித்து) எங்கே இருக்கிறோம்! எப்படி வந்தோம்! — ஓ, அஜ்ஞாத வாசமா—

## ஐந்தாம் அங்கம் - ஐந்தாங் களம்

### அகவல்

ஆமாம் ஆமாம் அறிந்தேன் அறிந்தேன்
பூமியில் வீரப் புகழ்பெறு வீம
உன்றன் கையால் உயிர்விடு கின்றேன்
என்றன் நலத்தினை என்னென மொழிவேன்
அந்தோ அறியா தவல மடைந்தேன்
இந்தத் தாரணி எனையுணர்ந் திடுமோ
இனிமேல்

பற்பல நாட்டிற் பற்பல மானிடர்
பற்பல பாஷையிற் பாடிப் பாடி
நம்முருக் கொண்டு நடித்திடு வாரே
அம்மவோ காண்போர் அங்கங் கொதித்து
நிந்தையாக் கூறி நீசனென் றெனைச்
சந்திர சூரியர் சரித்திடும் வரையில்
அழியாப் பழிக்கே ஆளாக் கிடுவரே
கழிபெருங் கடவுளே கடைக்கணித் தருளே.

(மண்ணிற் சாய்ந்து உயிர் விடுகிறான்) விரதசாரணீ! திரௌபதீ! உத்தமீ!



Printed at the Aurora Press, Madras — 1930.

# கா. நமச்சிவாய முதலியார்

பதிப்பித்தவை

1. **தொல்காப்பியப் பாயிரங்கள் :** இதில் ஆத்திரேயன் பேராசிரியன் செய்த பொதுப் பாயிரமும், அதன் உரையும்; பனம்பாரனார் செய்த சிறப்புப் பாயிரமும், அதற்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் செய்த உரைகளும்; சிவஞான முனிவர் செய்த பாயிர விருத்தியும் அடங்கியுள்ளன.

2. **தொல்காப்பியம் மூலம் — எழுத்தும், சொல்லும் :** இஃது, ஒவ்வொரு சூத்திரமும் நுதலிய பொருளைத் தலைப்பில் அமைத்து, கடின சந்திகளைப் பிரித்துப் பாட பேதங்கள் காட்டிப் பதிக்கப்பட்டுள்ளது. ரூ. 1

3. **தொல்காப்பியம் மூலம் — பொருள் :** ரூ. 1

4. **தொல்காப்பியம் — பொருளதிகாரம் :** இஃது இளம்பூரணர் செய்த அரிய உரையுடன் கூடியது :

I. அகத்திணையியல், புறத்திணையியல் ஆகிய இரண்டு இயல்கள் சேர்ந்தது முதற் பகுதி. ரூ. 2

5. **இறையனார் களவியல் :** இறையனார் அகப்பொருள் என்னும் பெயர் பெற்ற இந்நூல், பிழையற ஆராய்ந்து பதிக்கப்படுகிறது. அரிய குறிப்புகள் பலவற்றைக் கொண்டுளது (அச்சில்)

